

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பி னுள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்பி னுள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே.

—திருமூலர்.

பிப்ரவரி 1989

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 9

## உள்ளுறை

பக்கம்



அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில் ஸ்ரீவேணுகோபால சுவாமி திருக்கோயில் —கார்வேட்டுநகர்.

2 ம் பக்கம் : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் பிரம்மோத்சவத்தின்போது சக்ரஸ்நாநம்—ஸ்ரீநிவாச மங்காபுரம்

3-ம் பக்கம் : திருப்பதியில் 28-ஆவது இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்

பின்னட்டையில் : தெப்போத்சவம்-ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்-திருப்பதி.

சிறப்பாசிரியர்

திரு. சிஎச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

இம்மண்ணையும், அம்மண்ணில் திரியும் உயிர்களையும் படைத்துக் காத்து அழித்திடும் அப்பரம்பொருளினை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை எனும் ஐந்து நிலைகளில் வைத்து வழிபட வழி வகுத்தனர் நம் ஆன்றோர். இதில் முதல் நான்கு நிலைகளின்போது, மாதவனுக்கும் மானிடனுக்கும் உள்ள நெருக்கம் இறுகியிருந்தது. ஆகையால் தான் தவச்சீலர்களாலும், அருளாளப் பெரு மக்களாலும் தாங்கள் வேண்டியபோது இறைவனோடு அளவளாவவோ, அவன் திருமுகப்பேறு கண்டிடவோ முடிந்தது. ஆனால் அப்பெருமக்களிடம் அமைந்த ஆன்ம ஒளியும், தீவிர பக்தியும் காலகட்டத்தில் மங்கிவிட்டது, ஏன் மறைந்துவிட்டது என்றே கூறலாம். 'தேடிக்கொண்டேன் தேவாதி தேவனை, என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன்' எனும் அப்பரின் அநுபவம் இன்று எல்லோருக்கும் எளிதன்று. 'தேஹோ தேவாலய ப்ரோக்த: ஜீவோ தேவஸ் ஸநாதன:' எனும் உபநிஷத் தொடர் உடலைக் கோயிலாகவும், உயிரைத் தேவனாகவும் அழைத்தாலும் அந்நிலைக்கு உயரவோ, சூன்யத்திற்கும் இயற்கைக்கும் பின்னால் இயங்கும் சக்தியினைக் காணவோ முடியாத நிலையில் இன்றையச் சாதாரண மனிதன் ஆத்ம பலம் குன்றியுள்ளான். உள்ளத்தை உயர்த்தாது, ஆன்ம பலத்தைச் சிறக்கச் செய்யாது தன் உடல் வலிமையினையே பெரிதாக நினைத்தான். அதனைக் கட்டிக்காக்கவே தன் வாழ்நாளைக் கழித்தான். விளைவு, அவனுள் பூக்கும் சமய மலர் என்பது ஒரு குறிஞ்சி மலராகவே இருந்துள்ளது.

இச்சூழ்நிலையில்தான் அர்ச்சை எனும் இறைவனின் இறுதி நிலை மனிதனுக்கு ஒரு வரப்பிரஸாதமாக அமைந்தது, நாளும் தடுமாறும் சிந்தனையுடன் விளங்கிடும் மனிதனுக்குத் தனது சிந்தனையினை ஒரு முகப்படுத்தித் தன்னைப் படைத்தவனின் பெருமையினை ஒரு சில துளி நேரமாவது நினைத்துப் பார்த்திட இறைவனின் அர்ச்சை நிலை பெரிதும் உதவியது. தன் நிலைக்கு உயர முடியாது தத்தளிக்கும் தான் படைத்திட்ட அம்மனித உயிருக்கு உதவிடும் வகையில், தன்னை ஆராதிக்கவும், அணைக்கவும், ''இங்குள்ளோர் அங்குப் போவது மேன்மையை அனுபவிக்க, அங்குள்ளோர் இங்கு வருவது சீல குணநுபவம் பண்ணுகைக்கு' எனும்படி வானவரும் விரும்பி வழிபடும் வகையில், தன்னை மானிடன் நிலைக்குத் தாழ்த்திக் கொண்டு, அர்ச்சை வடிவில் தன் அருட்பார்வையினை வழங்கத் தலைப்பட்டான் அம் மாயவன்.

தன் அனுபவங்களுக்கும் - நம்பிக்கைகளுக்கும் - உணர்வுகளுக்கும் ஏற்ப அவ் அர்ச்சைக்குக் கல்லிலும், மரத்திலும், உலோகத்திலும் பல உருவமைதிகளை ஏற்படுத்தினான் மனிதன். இக்கடவுளர்களுக்குப் பல பெயரிட்டு மலைகளிலும், ஆற்றோரங்களிலும், காடுகளிலும் இயற்கையின் பின்னணியில் இல்லம் அமைத்து தான் வழிபட மட்டுமன்றி, பிறரும் தொழுதேத்திட வழிவகுத்தான். கலையும் கலாசாரமும் அழகு செய்ய மனிதனின் மன வளர்ச்சியால் இறைவனின் இல்லங்கள் விண்ணை முட்டும் அளவு உயர்ந்தன. பின்னர் புராணக் கதைகளை-வரலாற்றுச் சிறப்புகளை-அடியார்களின் தெய்வச் செயல்களை ஒட்டி, மன்னர்களாலும், மக்களாலும், இறைவன் உறையும் இல்லங்கள் ''கோயில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' எனும் உயர்மொழி தோன்றிடும் வகையில், ''தீர்த்தங்களுக்கு வடநாடு, கோயில்களுக்குத் தென்னாடு'' எனும்படி தென்னகத்தில் இன, இட, பெருமைகளுக்கேற்ப, எழுப்பப்பட்டன. இதுவே இந்தியக் கோயில்களின் வரலாறு. 'முக்கட் செல்வர் நகர்' 'பூமுடி நாகர் நகர்' என்னும் பெயர்களில் சங்க காலந்தொட்ட இக்கோயில்கள் இந்தியர்களின் வாழ்க்கையில் ஒன்று கலந்து, சமயச் சிறப்பினை மட்டுமன்றி சமுதாயத்தின் நிலைக்களன்களாகவும் விளங்கின.

''நலியும் நரகமும நைந்த நமக்கு இங்கு, கலியும் கெடும் கண்டு கொண்மின், கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்'' என்று ஆழ்வார் போற்றிய பாதையில் பலரும் ஏத்திப் பணிந்து, புற வழிபாட்டின் மூலம் அகவழிபாட்டிற்கு வழிவகுத்த இவ்அர்ச்சை நிலை இடம்பெற்றுள்ள பல கோயில்கள் இன்று எதிர் கொண்டுள்ள நிலை நம் நெஞ்சை உருக்குவதாக அமைந்துள்ளது. 'முன்னவனார் கோயில் பூஜைகள் முட்டிடின் மன்னர்க்கு தீங்குளவாரி வளங்குன்றும், கன்னம் களவு மிகுத்திடும் காசினி' எனும் திருமூலரின் எச்சரிக்கைக் குரல் இன்று நாட்டில் நடக்கும் நடப்புகளுக்கு ஒரு தீர்க்க தரிசனமாகும்.

கடல் கடந்து இந்து சமயம் பரப்ப முயன்ற அருளாளர்களின் சந்ததியினர், கடவுளர் சிலைகளைப்பொருளுக்காகக் கடல் கடந்து கடத்திச் செல்லும் அவலமும், கலைக் கூடங்களாகவும் சமுதாய மேம்பாட்டுத் தலங்களாகவும் விளங்கிய கோயில்கள் பல இன்று சமூக விரோதிகளின் கூடாரங்களாக மாறிய கொடுமையும், உலகுக்கு அருளொளி தந்திட்ட அத்தயாளனின் கருவறையில் இன்று ஒரு வேளை தீபத்திறதம், அவன் திருத்தாளில் வைத்திட மலர் ஒன்றுகூம் பஞ்சம் வந்திட்ட நிலையும், பஞ்சத்தால் பட்டணங்களே பரிதவித்தபோது அவற்றின் பசி தீர்த்த அன்றைய பல கோயில்களின் சொத்துக்கள் இன்று மாயமாய் மறைந்திட்ட மர்மமும் ஒவ்வொரு உண்மையான இந்துவையும் தலைகுனிய வைக்கும் செய்திகளாகும்.

இவற்றையெல்லாம் மனதிற்கொண்டே புதிய கோயில்களை உருவாக்குவதைவிட பல வகைகளிலும் சிறப்பும் பெருமையும் கொண்ட பழைய கோயில்களைப் புதுப்பித்தலே சாலச்சிறந்தது எனும் கருத்தில், திருமலை திருப்பதி தேவஸ்தானம் அண்மையில் திருப்பதிக்கருகே அப்பளாயகுண்ட்டா மற்றும் கார்வேட்டு நகர் ஆகிய கிராமங்களில் உள்ள இரு வைணவத் திருக்கோயில்களைத் தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்டுள்ளது. இதுபோன்ற தேவையான பராமரிப்பு இல்லாது விளங்கும் நாட்டில் உள்ள எல்லாக்கோயில்களையும் தி. தி. தே. ஏற்றுக்கொள்ளுவது என்பது நடைமுறைக்குச் சிறிதும ஒவ்வாச் செயலாகும், ஆகவே இது போன்ற நிலையில் உள்ள அவ்வவ் கோயில்களை அங்குள்ள மக்களே ஒன்றுபட்டு, தங்கள் வசதிக் கேற்றவாறு, அக்கோயில்களுக்கு மக்கள் நாடோறும் சென்று வழிபடும் வகையில் பராமரித்து வந்தால் அதுவே ஒவ்வொரு இந்துவும் அவன்தன் சமயத்திற்கு ஆற்றிடும் அருந்தொண்டாக அமையும் என்றே கூற விழைகின்றோம்.

# செய்திச் சுருக்கம்




**இசை நிகழ்ச்சி :**

19-1-89 அன்று சென்னை மைலாப்பூரில் உள்ள பொட்டி ஸ்ரீராமுலு நினைவு இல்லத்தில், அன்னாருடைய நினைவு நாள் ஒட்டி, திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் தமிழ்நாட்டுப் பிரிவான தர்ம பிரசார பரிஷத் ஆதரவில், தி. தி. தே. அன்னமாச்சார்யா திட்டத்துறையைச் சார்ந்த திரு. பி. எஸ். ரங்கநாதம் அவர்களின் இசை விழா ஒன்று நடைபெற்றது. உள்ளூர் பிரமுகர் திரு. வை. எஸ். சாஸ்திரி அவர்களும், தமிழ்நாடு தர்ம பிரசார பரிஷத்தின் செயலாளரான திரு. ஏ. சி. நரசிம்மன் அவர்களும் இந்நிகழ்ச்சி சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் பங்கேற்றனர்.

**இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் :**

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆதரவில் ஹைதராபாத் ஸ்ரீ சரோஜினி தேவி கண் மருத்துவ மனையைச் சார்ந்த டாக்டர். பி. ரங்கா ரெட்டி அவர்களின் தலைமையில் திருப்பதியில் மூன்றுவது இலவச சத்திரத்தில் 28வது இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் ஒன்று 21-1-89 முதல் 26-1-89 வரை நடைபெற்றது. 21-1-89 அன்று 2950 நோயாளர்கள் பரிசோதிக்கப்பட்டு, 22-1-89 அன்று 250 நோயாளிகளுக்குக் கண் அறுவை சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது. இதுபோது நோயாளிக்கும் அவருடைய உதவியாளர் ஒருவர்க்கும் இலவச தங்கு வசதி மற்றும் உணவு வழங்கப்பட்டது. நோயாளிகளுக்கு இலவசமாக மூக்குக் கண்ணாடிகளை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு தி. தி. தே பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா மற்றும் ஆந்திர மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. ஜே. பாபு ரெட்டி ஆகியோர் வழங்கினர். இவ் இலவச முகாமிற்காக சுமார் ரூ. 80,000/- செலவிடப்பட்டுள்ளது.

**ஜனவரி முதல் நாள :**

இவ்வாண்டு புத்தாண்டு நாளன்று திருமலைக்கு சுமார் 75,000 பக்தர்கள் வருகை புரிந்தனர். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் அன்றைய வருமானம் சுமார் ரூ. 26.54 இலட்சமாகும். உண்டி மூலமாக ரூ. 12.94 இலட்சமும், லட்டு விற்பனை மூலமாக ரூ. 8.35 இலட்சமும், சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் விற்பனை மூலமாக ரூ. 5.25 இலட்சமும் இத்தொகையில் அடங்கும். கடந்த ஆண்டு புத்தாண்டு நாள் வருமானம் ரூ. 24.15 இலட்சம் என்பது குறிப்பிடத்தக்கது.

**திருமலையில் ஆதிசங்கர ஜோதி :**

சிவன், விநாயகர் மற்றும் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்யர் ஆகியோரின் திருவுருவச் சிலைகள் இருக்கப் பெற்ற ஸ்ரீ ஆதிசங்கர ஜோதி ரதம் ஒன்று 2-1-89 அன்று திருமலைக்குக்கொண்டு வரப்பட்டது. ஆதிசங்கரரின் 1200-ஆவது ஜெயந்தி முன்னிட்டு, இவ் ரதம் இந்தியா முழுவதும் திருவீதி வலம்மேற்கொண்டுள்ளது. 21-11-88 அன்று, பகவத்பாதரின் பிறந்த இடமான காலடியில இவ்ஜோதி ரதம் தனது பயணத்தைத் துவக்கியது. 3-1-89 அன்று திருப்பதியில் ஏராளமான பக்தர்களும், யாத்திரிகர்களும் இவ்ஜோதி ரதத்தை வழிபட்டனர்.

**யோமா 89 :**

கன்னியாகுமரியில் உள்ள விவேகானந்தா யுவ கேந்த்ராவைச் சார்ந்த திருப்பதி பிரிவின் விவேகானந்தா யுவ கேந்த்ரா ஏற்பாடு செய்த 1989-ஆம் ஆண்டு விவேகானந்தர் மற்றும் இளைஞர் தேசிய எழுச்சி (யோமா) மாநாடு ஆந்திர மாநில அளவில் 9-1-89 முதல் 12-1-89 வரை திருப்பதி எஸ். வி. கீழ்த் திசைக் கல்லூரி வளாகத்தில் நான்கு நாட்களுக்கு நடைபெற்றது. இதுபோது சுவாமி விவேகானந்தரின் 126-வது ஜெயந்தி விழாவும் கொண்டாடப்பட்டது. ஆந்திர மாநிலத்தில் உள்ள பல்கலைக் கழகங்களின் ஆட்சிக்குட்பட்ட அனைத்து கல்லூரிகளைச் சார்ந்த சுமார் 100 மாணவர்கள் இம்மாநாட்டில் பங்கேற்றனர். விவேகானந்தர் உள்ளிட்டுப் பல்வேறு இந்து சமயத் தலைவர்கள் போதித்த ஆன்மீகம் மற்றும் சமயம் சம்பந்தப்பட்ட செய்திகளை இந்திய மக்களிடம் பரப்பும் முயற்சியில் இம்மாநாடு கூட்டப்பட்டது.

9-1-89 அன்று மாலை, விவேகானந்தரின் சம்பந்தப்பட்ட பொருட்காட்சி ஒன்று தி.தி.தே. இணை செயலாட்சித் தலைவர் திரு ஜி ரமேஷ் குமார் ஐ ஏ.எஸ். அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து தி. தி. தே. அன்னமாச்சார்யா திட்டத் துறையின் சிறப்பு அலுவலர் டாக்டர். மேடசானி மோகன் அவர்களின் 'அவதான' நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது'

டாக்டர். வெங்கடசுவாமி, (சிறப்பு அலுவலர் தி. தி. தே. நவீன சிறப்பு

(48-ம் பக்கம் பார்க்க)



களைப் பற்றி, உபதேச ரத்தின மாலை யில்,

பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்-பிள்ளை
மணவாளயோகி திருவாய் மொழி யைக் காத்த
குணவாளர் என்று நெஞ்சே கூறு.

(உபதேச ரத்தின மாலை 39)

என்கிறார் பெரிய ஜீயர்.

பிள்ளான :

இவருக்கு திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்று திருநாமம். இராமா நுஜரின் தாய் மாமாவான பெரிய திருமலை நம்பியின் திருக்குமாரரா வார். இவர் ஐப்பசி மாதம் பூராடம் திருநட்சத்திரத்தில் அவதரித்தார்.

# திருவாய்மொழியைக் காத்த குணவாளர்கள்

வேதங்களை அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ மதம் திகழ் கிறது. அந்த வேதத்தை ஸேவிப் பதற்கு தேச, கால, வர்ண நியம முண்டு. அந்த வேதத்தை அனைவரும் ஸேவிக்க முடியாது, ஆகையால் எல் லோரும் ஸேவிப்பதற்கு தகுந்தாற் போல் வேதத்தை உண்டாக்க வேண் டும் என்று எம்பெருமான் திருஉள் ளம் கொண்டு, ஆழ்வார் திருநகரில் நம்மாழ்வாரை அவதரிக்கச் செய்து, நான்கு வேதங்களை திராவிட மொழி யில் நான்கு ப்ரபந்தங்களை அவ தரிக்கச் செய்தான். அவை 1. ருக் வேதம் - திருவிருத்தம், 2. யஜுர் வேதம்-திருவாசிரியம், 3. அதர்வண வேதம்-பெரிய திருவந்தாதி, 4. சாம வேதம்-திருவாய்மொழி என்ற அடிப் படையில் அவதரித்தது.

நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு ப்ரபந்தங்களில் திருவாய் மொழி மிகச் சிறந்ததாகும். இது சாம வேதத்தின் ஸாரமாகும்.

பெரிய செல்வந்தன், தன் சொத் துக்களையும், செல்வங்களையும், வாரிசு இல்லாமல் திகழ்வதைக் கண்டு மனம் கலங்கி, இந்த செல்வங்களை யாரிடத் திலாவது ஒப்படைத்தால் ஒழிய தரிக்க மாட்டேன் என்று திருஉள்ளம் கொண்டு, அலைந்து, திரிவது போல, திருவாய்மொழியின் பொருளை நன்கு கற்று தேர்ந்தவற்றை யாராடத்திலா வது ஒப்படைக்க வேண்டும் என்று திருஉள்ளம் பற்றி ஐந்து குணவாளர் கள் தோன்றினார்கள்.

முதலில் திருக்குருகைப்பிரான் பிள் ளான் என்பவர் ஆறாயிரப்படியும், நஞ்சீயர் - ஒன்பதினாயிரப்படியும், பெரிய வாச்சான் பிள்ளை-இருபத்து நாலாயிரப்படியும், வடக்குத் திரு வீதிப் பிள்ளை-முப்பதாறாயிரப்படியும் (இதற்கு ஈடு என்றும் கூறுவார்கள்) வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர்-பன்னீராயிரப்படி என்றும் திருவாய் மொழிக்குஉரை எழுதிக்காப்பாற்றிய குணவாளர்கள் ஆவார்கள். இவர் களைப் பற்றி,

இராமாநுஜர் திருக்குருகைப்பிரான் பிள்ளையை அழைத்து 'நீ திருவாய் மொழிக்கு ஒரு வியாக்கியானம் எழுது' என்று நியமித்தார். அந்த நியமனத்தைச்சிரசாகக்கொண்டு திரு வாய் மொழிக்கு ஆறாயிரப்படி என்ற வியாக்கியானம் செய்தார்.

வைணவக் கொண்டல்
திரு. G. இலட்சுமணன் M.A.,
சேடப்பாளையம்

ஆறாயிரப்படி :

முத்தும் பவளமும் கோத்த மணி போல தமிழும் வடமொழியும் கலந்த மணிப்ரவாள நடையில் எழுதப்பட் டுள்ளது. ஸ்ரீவிஷ்ணு புராணம் ஆறு யிரம் ஸ்லோகங்களைக் கொண்டது. அந்த அடிப்படையில் எழுத்துக்கள் ஒற்று ஒழிந்த, உயிரும், உயிர்மெய்யு மான முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டது ஒரு க்ரந்தம் (அல்லது) ஸ்லோகம். அதே போல் ஆறாயிரம் க்ரந்தங்களால் எழுதப்பட்டதால்



நம்மாழ்வார்

இதற்கு ஆருயிரப்படி எனப் பெயர் பெற்றது. இதை,

தெள்ளாரும் ஞானத் திருக் குருகைப் பிரான்
பிள்ளான் எதிராசர் பேர் அருளால் - உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப் பொருளை அன்று உரைத்தது
இன்பம் மிகும் ஆருயிரம்.

(உ. ர. மாலை. 41)

என்கிறார் மாமுனிகள்.

**'படி' :**

'படி' என்பதற்கு 'அளவு' என்று பொருள் தரும். ஆனால் பேராசிரியர் டாக்டர். திரு. ஆர். ரங்கராஜன், அவர்கள் 'படி' என்பதை வியாக்கியானம் என்றே சொல்ல வேண்டும் என்று ஆய்ந்து கூறியுள்ளார். அதாவது 'ஆருயிரப்படி' என்றால் ஆருயிரம் வியாக்கியானம் என்று பொருள் கொள்ள வேண்டும் என்கிறார்.

**நஞ்சீயர் :**

இவர் பட்டரின் சீடராவார். இவர் திருநாராயண புரத்தில் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் அவதரித்தார். நஞ்சீயர், தம் ஆசாரியரான பட்டரிடம் ஆருயிரப்படி வியாக்கியானத்தைக் கேட்டார். பின்பு அதைச்சிறிது விரிவாகச் செய்ய திருஉள்ளங்கொண்டு பட்டரிடம் விண்ணப்பிக்க, அவர் அனுமதி கொண்டு ஒன்பதினாயிரப்படி என்னும் வியாக்கியானம் திருவாய்மொழிக்குச் செய்தார்.

இந்த 'ஒன்பதினாயிரப்படி' நூலை நன்றாக எழுதுவார் உண்டோ என கோஷ்டியில் நஞ்சீயர் கேட்க, எல்லோரும் நம்பூர் வரதரை காட்டிக் கொடுத்தார்கள். அவரை திருத்திப் பணி கொண்டு அவருக்கு ஒன்பதினாயிரப்படியை ஒரு முறை காலக்ஷேபம் செய்தார். பின்பு அவரை எழுதி வரும்படி நியமித்தார். அந்த நியமனத்தை சிரசாவகித்து தன் ஊருக்குச் சென்று எழுதி வருவதாகப் புறப்பட்டார்.

அவர் செல்லும் போது காவிரியைக் கடக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. நீர் அதிகமாக பெருகி வந்தது. அதனால் ஒன்பதினாயிரப்படி க்ரந்தத்தை தன் பரிவட்டத்தில் வைத்து தலையில் கட்டிக் கொண்டு நீந்தினார். அச்சமயம் ஒரு பெரிய அலை வந்து தலையிலுள்ள பரிவட்டத்தை அவிழ்த்துவிட்டது. பட்டோலையை நீர் அடித்துச் சென்றுவிட்டது. கரையை அடைந்த வரதராஜர், பட்டோலை போய்விட்டதே, இனி என் செய்வது என்று வருந்தி தன் வீடு திரும்பினார்.

அன்று இரவு உணவு உண்ணாமலும் திருவாராதனை செய்யாமலும் சோகமாய் உறங்கினார். அன்று திருவரங்கன், கனவில் தோன்றி 'நீர் கவலைப் படாதே உன் ஆசாரியரான நஞ்சீயரை த்யானித்துக் கொண்டு எழுத ஆரம்பித்தால், நாம் உனது நினைவில் இருந்து சொல்லுகிறோம்' என்றுகூற அவ்வாறே நம்பூர்வரதரும் ஒன்பதினாயிரப்படியை எழுதினார்.

பின்பு நஞ்சீயரிடம் கொண்டுபோய் காட்ட அதைக் கண்ட நஞ்சீயர் சில இடங்களில் அபரிமிதமான உரையைக் கண்டு, இதை எப்படி எழுதினீர் என்று கேட்க, நடந்த வரலாற்றை ஒன்று விடாமல் சொல்ல, இதைக் கண்ட நஞ்சீயர், எனக்கு ஒரு பிள்ளை இருந்தால் என்ன செய்வானோ, அந்த காரியத்தை செய்து முடித்ததால், 'வாராய்! நம் பிள்ளை' என்று கட்டித் தழுவினார். அன்று முதல் நம்பூர்வரதருக்கு நம்பிள்ளை என்ற திருநாமம் உண்டாயிற்று. ஆகவே ஒன்பதினாயிரப்படியை நம்பிள்ளை எழுதியது என்றும் கூறலாம்.

**ஒன்பதினாயிரப்படி :**

இராமானுஜர் பிரம சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் எழுதினார். அது ஒன்பதினாயிரம் க்ரந்தங்களாக எழுதி முடித்தார். அந்த அடிப்படையில் தமிழும், வடமொழியும் கலந்த நடையில், எழுத்துக்கள் ஒற்று ஒழிந்த, உயிரும், உயிர்மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துக்கள் கொண்டது ஒரு க்ரந்தம். இப்படி ஒன்பதினாயிரம் க்ரந்தங்களாக, திருவாய் மொழிக்கு உரை எழுதப்பட்டதால், இதற்கு ஒன்பதினாயிரப்படி என்று பெயர். இதை,

தஞ்சீரை ஞானியர்கள் தாம் புகழும் வேதாந்தி

நஞ்சீயர் தாம் பட்டர் நல் அருளால் - எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை ஆய்ந்து உரைத்தது
ஏர் ஒன்பதினாயிரம்.

(உ. ர. மாலை-42)

என்கிறார் யதீந்திரப் ப்ரவணர்.

**பெரிய வாச்சான் பிள்ளை :**

இவர் யாமுனதேசிகருக்கும், நாச்சியாரம்மாளுக்கும், ஆவணி மாதம் ரோஹிணியில் அவதரித்தார். அவர் அவதார ஸ்தலம் சங்கநல்லூர் ஆகும். இவருக்கு நம்பிள்ளை ஆச்சாரியர் ஆவார். நம்பிள்ளையின் உகந்த மாணவராய் திகழ்ந்தார். இவர் பல சாஸ்திரங்களை அலகு அலகாகக் கற்று இருந்ததால், இவரைக் கொண்டு திருவாய் மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்ய திருஉள்ளம் கொண்டு, நம்பிள்ளை நியமித்தார். அந்த நியமனத்தை தலைக்கு அணியாகக் கொண்டு, இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானம் செய்தார்.

**இருபத்து நாலாயிரப்படி :**

'ஸ்ரீ ராமாயணம்' இருபத்து நாலாயிரம் சுலோகங்களை உடையது. அந்த அடிப்படையில், தமிழும், வடமொழியும் கலந்த நடையில், ஒற்று ஒழிந்த, உயிர், உயிர்மெய், எழுத்துக்கள் முப்பத்திரண்டு கொண்டது ஒரு க்ரந்தம். இப்படி இருபத்து நாலாயிரம் க்ரந்தங்களால் எழுதப்பட்டதால் இதற்கு இருபத்து நாலாயிரப் படி என பெயர் வந்தது. இதை,

"நம்பிள்ளை தம்முடைய நல்அருளால் ஏவியிட
பின் பெரியவாச்சான்பிள்ளை அதனால்- இன்பா
வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது
இருபத்து நாலாயிரம்."

(உ. ர. மாலை-43)

என்கிறார் தீபக்தியாதி குணார்ணவர்.

**வடக்குத் திருவீதிப்பிள்ளை :**

இவருக்கு ஸ்ரீ கிருஷ்ணபாதர் என்று பெயர். இவர் திருவரங்கத்தில் வடக்குத் தெருவில் பிறந்தாலும் தெளிந்த ஞானத்தை உடையவராதலாலும், இவருக்கு தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை என்று அடைமொழி கொடுத்து கூறப்பட்டது. இவர் ஆனி மாதம் ஸ்வாதியில் அவதரித்தார். இவருக்கு ஆசாரியர் நம்பிள்ளை ஆவார்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை, நம்பிள்ளையின் திருவாய்மொழி காலக்ஷேபம் கேட்டு, கேட்ட அர்த்தங்களை ஒன்று விடாமல் வீட்டிற்குச் சென்று ஏடுபடுத்தி வந்தார். காலக்ஷேபம் முடிந்தபின் தான் ஏடுபடுத்திய க்ரந்தத்தை நம்பிள்ளையிடம் காட்டினார். அதைநம்பிள்ளைவாங்கிப் பார்த்து, 'நீர் நன்றாகத்தான் எழுதியுள்ளீர். ஆனால் நம் நியமனமில்லாமல் எழுதினீர்' என்றுகூறி அதை ஒரு கட்டாகக் கட்டி, ஒரிடத்தில் வைத்து விட்டார்.

இன் நிகழ்ச்சியை கேள்வியுற்ற நம்பிள்ளையின் மாணுக்கரான மாதவப் பெருமாள், அரங்கன் முன் சென்று 'நம்பிள்ளை யாருக்கும் பயன்படாமல் ஒரு க்ரந்தத்தை கட்டி வைத்துள்ளார். அந்த க்ரந்தத்தை கேட்க வேண்டும் என ஆவலாய் இருக்கிறேன்' என்று விண்ணப்பம் செய்தார்.

சில நாட்கள் கழித்து நம்பிள்ளை அரங்கன் திருவடித் தொழச் செல்லும் போது, அரங்கன் நம்பிள்ளைப் பார்த்து 'நீர் கட்டி வைத்துள்ள முப்பத்தாறாயிரப்படியை, மாதவப் பெருமாளுக்குப் பிரசாதியும்' என்று கட்டளையிட்டார். அதை மகாபிரசாதமாகக் கொண்டு முப்பத்தாறாயிரப்படியை நம்பிள்ளை வெளியிட்டார்.

**முப்பத்தாறாயிரப்படி :**

இராமாநுஜர் பிரம சூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் செய்தார். அந்த ஸ்ரீ பாஷ்யத்திலுள்ள ஆழ்பொருளை விளக்கும் பொருட்டு, சுதரிசனபட்டர் என்பவர் சுருதப்பிரகாசிகை என்ற நூல் ஒன்றைச் செய்தார். அது முப்பத்தாறாயிரம் க்ரந்தங்களைக் கொண்டது. அதேபோல் தமிழும், வடமொழியும் கலந்த நடையில் எழுதப்பட்டது. ஒற்று ஒழிந்த, உயிர், உயிர்மெய் எழுத்துக்கள் முப்பத்




ஸ்ரீராமானுஜர்

திரண்டு எழுத்துக்களைக் கொண்டது ஒரு க்ரந்தம். இப்படி முப்பத்தாறு யிரம் க்ரந்தங்களால் எழுதப்பட்ட தால் இதற்கு முப்பத்தாறுயிரப்படி என்று பெயர் உண்டாயிற்று. இதை 'ஈடு' என்றும் கூறுவார்கள். இந்த ஈடு முப்பத்தாறுயிரப்படியை திரு வரங்கன் ஓர் ஆண்டு காலம் மண வாளமாமுனிகளிடம் காலக்ஷேபம் கேட்டு மகிழ்ந்தான் என்பது மிகச் சிறப்புடையதாகும். இதை,

"தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறி தன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை இந்த
நாடறிய மாறன் மறைப் பொருளை நன்கு உரைத்தது
ஈடு முப்பத்தாறுயிரம்."

(உ. ர. மாலை-44)

என்கிறார் செந்தமிழ் வேதியர்.

"நாமார் பெரிய திருமண்டபம் ஆர்? நம்பெருமான்
தாமாக எம்மைத் தனித்து அழைத்து- நீ மாறன்
செநதமிழ் வேதத்தின் செம்பொருளை நாளும் இங்கே
வந்து உரை என்று ஏவுவதே வாய்ந்து."

என்று யதீந்திரப் பிரவண பிர பாவத்தில் கூறப்பட்டுள்ளது.

**வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் :**

இவர் ப்ரம்மதேசம் மன்னார் கோயி வில் அவதரித்தார். இவர் திருநட் சத்திரம் ஆனியில் ஸ்வாதியாகும். இவருடைய ஆசாரியர் பெரிய வாச் சான்பிள்ளை ஆவார். இவருக்கு வரதராஜர் என்ற திருநாமமும் உண்டு. இவர், ஒரு நாள் மடத்தில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்த மாணவர்களைப் பார்த்து, 'என்ன படிக்கிறீர்கள்' என்று கேட்டார். அதற்கு அவர்கள் 'முசலகிசலயம்' என்ற நூலைப்படிக்கிறோம்என்றார்கள்.

இதை அப்படியே தன் குருவிடம் சொல்ல, அதற்கு அவர் முசலகிசல யம் என்பது 'உலக்கைக் கொழுந்து'. உனக்கு படிப்பு வாசனை இல் லாததால். அவர்கள் வேடிக்கை யாக கேலி செய்துள்ளார்கள்' என்று கூறினார். இதைக் கேட்ட வாதிகேசரி சீயர் தன் குருவிடம் படிக்கத் தொடங்கி, புலமை பெற்று 'முசலகி சலயம்' என்ற காவியம் செய்து, தன்னைப் பார்த்து எள்ளி நகையாடி யவர்களிடம் காட்டினார். பின்பு இவர் துறவறம் பூண்டு, பல சமயங் களை வென்றதால் வாதிகேசரி ஜீயர் (வாதத்தில் சிங்கத்தைப் போன்ற தலைவர்) என பெயர் உண்டாயிற்று, இவர் தன் ஆசாரியர் நியமனத்தால். திருவாய் மொழிக்குப் பன்னீராயிரப் படி க்ரந்தம் செய்தார்.



மணவாள மாமுனிகள்

**பன்னீராயிரப்படி :**

'ஸ்ரீ பாகவதம்' பன்னீராயிரம் க்ரந்தங்களைக் கொண்டது. அந்த நூலின் அடிப்படையில் ஒற்று எழுத்து ஒழிந்த, மற்றைய உயிர், உயிர்மெய் எழுத்துக்களால் முப்பதி திரண்டு எழுத்துக்களால் கொண்டது ஒரு க்ரந்தமாகும். இப்படி பன்னீரா யிரம் க்ரந்தங்களால் எழுதப்பட்ட தால் இதற்கு பன்னீராயிரப்படி என பெயர் ஏற்பட்டது. இதை,

"அன்போடு அழகிய மணவாளச்சீயர்
பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா- தன் பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருள் உரைத்தது
ஏதமில் பன்னீராயிரம்."

(உ. ர. மாலை-45)

என்கிறார் இராமாநுஜன் பொன்னடி.

ஆகவே வேதத்தின் சாரமான திரு வாய்மொழிக்கு பிள்ளான், நஞ்சீயர். பெரிய வாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் போன்றவர்கள் வியாக்கியானம் செய்தனர். இதனால் திருவாய் மொழியைக் காத்த குண வாளர்கள் ஆவார்கள். இவர்களு டைய வியாக்கியானம் இல்லையேல் திருவாய்மொழி கடல் ஓசை போல் ஆகி இருக்கும். இதை காத்து ப்ர மேத்தோடு அளித்த குணவாளர்கள் வாழி! அவர்கள் செய்த வியாக்கி யானங்கள் வாழி!

# உத்தம புருஷன்



'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' என்று த்ரிவிக்ரமனை ஆண்டாள் உத்தமனாக வர்ணித்தாள். அது பகவானின் உயர்ந்த குணங்களை வெளியிடுவதாக அமைந்துள்ளது.

உலகில் மனிதர்கள் நான்கு வகைப் படுவர்—அதமாதமன், அதமன், மத்யமன், உத்தமன் என்றபடி. தானும் கெட்டுப்பிறரையும் கெடுப்பவன் அதமாதமன். மற்றவர்களுக்குக் கெடுதலை விளைவித்துத் தான் பிழைப்பவன் அதமன். தானும் வாழ வேண்டும் பிறரும் வாழ வேண்டுமென்றிருப்பவன் மத்யமன். தான் கெட்டாலும் பிறர் வாழவேண்டுமென்றிருப்பவன் உத்தமன். இவற்றை விளக்க நான்கு உதாஹரணங்கள் கொடுக்கப் படுகின்றன. ஒருவன் ஆஹாரத்தில் ஈ புகுந்து உள் சென்றுவிட்டால், அது தான் சாவதுமல்லாமல் அவனுக்கும் வயிற்றைப் புரட்டி வாந்தியெடுக்கச் செய்து கெடுதல் செய்கிறது. இது அதமாதமனுக்கு உதாஹரணம். தேளும் பசுவும் அதமனுக்கும் மத்யமனுக்கும் முறையே உதாஹரணங்கள். சந்தனக்கட்டை தன்னை ஒருவன் தேய்த்தாலும், அவனுக்கு பதிலாக நறுமணத்தையே அளிக்கிறது. இது உத்தமனுக்குத் தகுந்த உதாஹரணம். எம்பெருமான் தன்னை யழிய மாறி வாமனனாகியும், இழிவான இரப்புத் தொழில் மேற்கொண்டும் தனது பக்தர்களான தேவர்களுக்கு உதவியது பற்றி அவர் உயர்ந்த உத்தமனாகிறார். ஆக, தனக்காகவும் அல்லது தனக்கும் பிறர்க்காகவும் இரந்து, தென்றலும் நிலவும் போலே பிறர்க்கேயாயிருக்கை உத்தமனின் உயர்ந்த பண்பு என்றதாயிற்று.

மஹாபலி தான் வாக்களித்தபடி எம்பெருமானுக்கு மூன்று பாதங்கள் (அடிவைப்பு அளவுள்ள நிலத்தை) கொடுக்க முடியாமல் போனான். ஆகவே கோதை அவனுக்கு மூன்று பாதங்களை அளித்தாள் என்று இங்கு ரஸமாகக் கூறுவர். அவள் அளித்த மூன்று பாதங்களாவன 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி', 'அம்பர மூடறுத்தோங்கி உலகளந்த', 'அன்றிவ்வுலகமளந்தாய் அடி போற்றி' என்பன. மேலும் வேதம் விஷ்ணுவுக்கு மூன்று மண் பாண்டங்களைக் கொண்டு யஜ்ஞம் செய்ய வேண்டுமென்று விதிக்கிறது. ஆண்டாள் இந்த மூன்று பாதங்களை மூன்று மண் பாண்டங்களாகக் கொண்டு எம்பெருமானைக் குறித்து ஜ்ஞான யஜ்ஞமாகிய திருப்பாவையைச் செய்தாள் என்றும் கூறுவர்.

'ஓங்கி உலகளந்த' என்றதிலுள்ள 'ஓங்கி' என்ற முதல் பதத்தின் முதல் எழுத்தான ஓங்காரத்தை, வாமனன் எவ்விதம் த்ரிவிக்ரமனாக நீண்டானோ அவ்விதம் நாம் எவ்வளவு வேண்

---


திரு. ஸா. ஸ்ரீநிவாஸன்,
புதுதில்லி.


---

டினும் நீட்டலாம். தன்னுடைய பக்தனை இந்திரன் கஷ்டப்படுவதைக் கண்டு பொறுக்காத விஷ்ணு மிகவும் சுருங்கி வாமனன் ஆனாராம். அதுவே அவன் துயரைத் துடைக்க

அவகாஸம் கிடைத்ததும் அந்த ஸந்தோஷத்தினுல் வளர ஆரம்பித்தாராம். எவ்விதம் இரவில் வளைந்து தரையுடன் கிடக்கும் மூங்கில் ஸூர்ய வெளிச்சம் பட்டவுடன் நிமிர்ந்து உயரக் கிளம்புகிறதோ, அவ்விதமே வாமனன் த்ரிவிக்ரமனுக ஓங்கினுன் என்க. மேலும், யாசிக்க வேண்டியதை நினைத்ததுமே எம்பெருமான் உடல்குன்றி வாமனன் ஆனுன் என்றும், தன் மனோரதம் பூர்த்தியானதும் ஆனந்தத்தால் வளர்ந்து கொண்டே சென்றுன் என்றும் கூறுவர்.

தன்னுடைய உயர்ந்த பிறவி, பதவி, கல்வி கேள்விகள் முதலியவற்றைப் பாராமல் தன்னைவிடத் தண்ணியரானவர்களோடு ஒரு நீராகக் கலந்து பரிமாறும் குணம் ஸௌலப்யம் எனப்படும். இதையுடையவனே உத்தமனுவான். முண்டக உபநிஷத்,

द्वासुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।
तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति अवश्वन्नन्यो ऽभिचाकशीति ॥

என்று ஓதிற்று. இதன் பொருள்: ஒரே மரத்தில் அழகிய இறகுகளையுடைய இரண்டு பக்ஷிகள் இணை பிரியாத நண்பர்களாய் வசிக்கின்றன. அவற்றுள் ஒன்று அதன் அத்திப் பழங்களை உண்கிறது. மற்றொன்று உண்ணுமலே ப்ரகாசிக்கிறது என்றபடி. இந்த வாக்யத்திற்குப் பெரியோர்கள் அழகான விதத்தில் பொருளுரைக்கும் வகையை நாம் சிறிது அநுபவிப்போம். இரண்டு பறவைகள் ஒரு மரத்தில் ஒண்டிக் கொண்டிருக்கின்றன. ஏன்? அவை சிறகொடிந்தவையா? மரத்தோடு ஒட்டிக் கிடப்பானேன்? அல்ல सुपर्णौ நல்லவிதமான இறகு படைத்தவைதாம். அப்படியானுல் அவை கூடி வாழ்வானேன்? இஷ்டப்படி பறக்கலாமல்லவா? அல்ல. सयुजौ அவை எப்போதும் இணை பிரியாதவை. ஆகவே சேர்ந்திருக்கின்றன. ஆயினும் அவை மனத்தில் ஒன்றை ஒன்று வெறுத்து வெவ்வேறு எண்ணியிருக்குமோ? அல்ல. सखायौ அவைஒருமித்த கருத்தையுடைய நண்பர்கள்.

समानं वृक्षं ஒரே மரத்தை परिषस्वजाते தழுவிக் கொண்டு கிடக்கின்றன.

मया तु भक्त्या तस्यैव वामनस्योपभुज्यते ।

என்று விச்வாமித்ர ரிஷி 'ஸ்ரீ வாமன பகவானுடைய ஸித்தாச்ரமத்தில் அவனிடம் யான் கொண்ட பக்தியினுலே, அந்த பூமியை மோந்து கொண்டு கிடக்கிறேன்' என்றுனன்றோ? அதுபோல் இங்கும் ஆதரவுடன் வாழ்வதை இப்பதம் குறிக்கும்.

அங்கு அவை எப்படி வாழ்கின்றன? இரண்டில் ஒரு பறவை அந்த மரம் ஈந்த கனிகளை உண்டு உயிர் வாழ்கிறது. மற்றொன்றோவென்றுல் அங்குப் பழுத்த எந்தக் கனியையும் உண்பதே இல்லை. ஆயினும் உண்ணுமலே உண்டதுபோல் உயர்ந்த தோற்றமுடையதாக இருக்கிறது.

இங்கு மரம் என்பது ஸம்ஸாரிகளின் உடல். இரு பறவைகள் ஜீவாத்மாவும் பரமாத்மாவும். அந்த மரம் ஸுகம், துக்கம் என்னும் இருவித கனிகளைப் பயக்கும். கர்ம பலன்களாகிய இப்பழங்களை ஒரு பக்ஷி, அதாவது ஜீவாத்மா புசிக்கிறது. பரமாத்மா கர்மாதீனனல்லாமையாலே புசிக்காமலே புகழுடன் விளங்குகிறுன். ஜீவனுக்கு அந்தர்யாமியாகக் கூடவே உள்ளான். ஜீவாத்மாவுக்கு கர்மம், ஜ்ஞானம் என்ற இரண்டு இறகுகளும், பரமாத்மாவுக்கு பரத்துவம், ஸௌலப்யம் என்ற இரண்டு இறக்கைகளுமுள்ளன என்று ஆசார்யர்கள் விளக்குகின்றனர். ஆக, உத்தம புருஷனை எம்பெருமானுக்கு ஸௌலப்யம் ஒரு சிறந்த குணம் என்றதாயிற்று.

மஹாபலி தர்மத்துக்கு விருத்தமாக இந்திராதி தேவர்களின் குடியிருப்பைக் கவர்ந்தான். அதை மீட்டு உரியவர்களுக்கே அளித்ததனுல் எம்பெருமான் தான் கீதையில் கூறியபடியே தர்ம ஸம்ஸ்தாபனம் செய்த உத்தமனுகிறுன்.

உலகளந்த வ்ருத்தாந்தத்திலிருந்தே இவன் எல்லோருக்கும் மேம்பட்ட உத்தமன் என்பது தெளிவாகிறது.

एकः प्रासीसरत्पादमेकः प्राक्षिक्षलन्मुदा ।
अपरोऽप्यधरन्मूर्ध्ना कोऽधिकस्तेषु गण्यताम् ॥

'மும்மூர்த்திகள் என்று ப்ரஸித்தி பெற்றவர்களில் ஒருவனுன விஷ்ணு திருவடியை நீட்டினுன்; மற்றொருவனுன பிரமன் அதை உகப்புடன் கழுவினுன்; மூன்றுமவனுன சிவன் அந்நீரைத் தலையிலே தரித்தான். இவர்களுள் எவன் பெரியவன் என்பதை எண்ணிப் பாருங்கள்' என்கிறபடியே உத்தமன் யார் என்பது தெளிவாகிறது. இதைத் திருமழிசையாழ்வார்.

குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினுன்
அண்டத்தான் சேவடியை யாங்கு.

என்று அருளினுர். இதன் பொருளாவது; பிரமதேவன் அபேக்ஷிதங்களைப் பெற்று கமண்டல தீர்த்தத்தை வார்த்து, வேதங்களிலுள்ள புருஷ ஸூக்தம் முதலிய மந்திரங்களினுல் மங்களாசாஸனம் பண்ணி எம்பெருமான் உலகளந்த அக்காலத்தில் அந்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளை விஷகண்டனுன ருத்ரனுடைய தலையில் பகவானின் ஸ்ரீபாத தீர்த்தம் விழும்படியாக விளங்கினுன் என்றபடி. அண்டக்குலத்துக்கு அதிபதியானவன் திருவடியை ஓர் அண்டத்துக்கு அதிபதியாயிருக்குமவன் அவ்வண்டத்தினுள்ளேயிருக்கும் தன் பிள்ளையினுடைய பாபம் தீர்வதற்காகக் கழுவினுன் என்றபடி. द्रवीभूतस्तदा धर्मो என்று தொடங்கும் ஈச்வர ஸம்ஹிதை ச்லோகங்கள் இங்கு அநுஸந்தேயம்.

அவற்றின் பொருள் வருமாறு: ரிஷி ச்ரேஷ்டரே! பகவான் திருவுலகளந்தருளின அச்சமயம் ஹரியினிடம் பக்தியினால் தர்மம் ஜலமாயிற்று. தர்மமாகிய அந்த ஜலத்தையெடுத்து ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக அவனுடைய திருவடியானது பிரமனாகிற என்னால் மேலான பக்தியுடன் விளக்கப்பட்டது. பாத்யம், அர்க்யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப் பார்த்து 'நான் பரிசுத்தப் படுத்தத் தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிச்சயித்து சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக் கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள் ருத்திரன் அப்படியே அதைவிடவில்லை.'

'சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கி' என்று இந்த வ்ருத்தாந்தத்தைப்பெரியாழ்வாரும் அருளிச் செய்தார். சதுர்முக ப்ரஹ்மாவினுடைய கையிலும், சதுர்ப்புஜனான எம்பெருமானுடைய திருவடியிலும், பின்பு சிவனுடைய ஜடையிலும் தங்கிய கங்கை என்றபடி.

எம்பெருமானுடைய பரத்வம் முதலிய உத்தம குணங்கள் த்ரிவிக்ரம அவதாரத்தில் பொலிகின்றன என்பதைக் காண்பிக்க திருமழிசைப் பிரான் வாமனனை ஒருவன் என்றே குறிக்கிறார் கீழ்க்கண்ட பாசுரத்தில்.

தானொருவனாகித் தரணியிடந்தெடுத்து
ஏனொருவனாயெயிற்றில் தாங்கியதும்— யானொருவன்
இன்றாவறிகின்றேனல்லேன் இரு நிலத்தைச்
சென்றாங்கடிப்படுத்த சேய்.

இதன் பொருள்: தான் ஒப்பற்ற அழகையுடைய வாமனனாய், மஹாபலியினிடத்தில் யாசகனாய்ச் சென்று அந்த மாவலியின் யாக பூமியிலே விசாலமான இந்நிலத்தை அளந்து கொண்ட சிறு பிள்ளையானவன் விலக்ஷண வராஹரூபியாய்ப் பிரளயப் பெருங்கடலுள் முழுகிப் பூமியை அண்டபீத்தியினின்றும் குத்தியெடுத்துத் தனது கோரைப் பல்லின் மீது தரித்ததை நானொருவன் மாத்திரம் இன்றாக அறிகிறேனில்லை, நெடு நாளாகவே அனைவரும் அறிவர் என்றபடி.

இங்கு 'தானொருவனாகி' என்பதற்கு ஸர்வேச்வரனாயிருக்கும் தானே ஒப்பற்றதொரு நிலையையுடையவனாகி என்று பொருள்படும், பெரியவனுக்கு ஒப்பற்ற நிலையாவது ஸௌசீல்ய ஸௌலப்ய வாத்ஸல்ய குணங்களின் எல்லை நிலத்திலே நிற்கை. அது வாமனனாய் நின்ற நிலையே யாகும். 'ஒரு மாணிக்குறளாகி' என்றார் நம்மாழ்வாரும். 'ஒருவன்' என்பதும் 'வாமனன்' என்பதும் பர்யாயம் போலும். பெரியவன் தாழ நின்றான், ஸகல பலப்ரதன் யாசகனாகி நின்றான். அபேக்ஷையை எதிர்ப்பார்க்காமலே, குணாகுண நிரூபணம் செய்யாமல், வசிஷ்டன் சண்டாளன் என்று வ்யத்யாஸம் பாராமல், எல்லாரையும் திருவடியாலே தடவிக் கொடுத்தான். இதுவன்றோ ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய குணங்களின் எல்லை நிலமாவது, இவனையன்றோ ஒருவன், தந்நிகரற்றவன் என்று கூறவேண்டும் என்பது கருத்து.

இந்தஉத்தமனின் பெருமையைநாம் சொல்ல வேண்டியிருக்கிறதோ? அது அர்ஜுனனால் அறியப்பட்டதன்றோ? என்கிறார் நம்மாழ்வார் பின்வரும் பாசுரத்தாலே.

தீர்த்தனுலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தியவையே சிவன் முடிமேல் தான் கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந் துழாயான் பெருமை
பேர்த்துமொருவரால் பேசக்கிடந்ததே?

மஹா பாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்கு பாசுபத அஸ்திரம் வேண்டியிருந்தது. சிவபிரானை ஆராதித்து அதனைப் பெற வேண்டுமென்று அவன் முயற்சி செய்யப் போகையில், இவனுக்கு இவ்வளவு பரிச்ரமம் எதற்கு என்று கருணை கொண்ட கண்ணபிரான் அர்ஜுனனை நோக்கி 'ருத்ரனிடம் நீ செய்ய நினைத்திருக்கிற ஆராதனத்தை என் திருவடியில் செய்துவேண்டியதைப் பெறுவாயாக' என்று கட்டளையிட அவன் சில புஷ்பங்களையிட்டுக்கண்ணன் திருவடிகளை அர்ச்சிக்க, அன்றிரவு அதே புஷ்பங்களை ருத்ரனின் தலையில் கண்டு கண்ணனே பரம்பொருள் என்று தெளிந்தான் என்க. அதே புஷ்பங்களைக் கண்டான், வேறு அதுபோன்ற புஷ்பங்களையல்ல; தானே கண்டான், ஒருவர் சொல்லி கேள்விப்படவில்லை என்பவை இங்கு அறியத்தக்கன. கண்ணனைச் சொல்லுமிடத்தில் 'உலகளந்த சேவடிமேல்' என்று நம்மாழ்வார் அருளியதின் கருத்து த்ரிவிக்ரம அவதாரத்தில் எம்பெருமானின் பரத்வம் ப்ரஸித்தம் என்ற எண்ணத்தினால். இங்கு

पार्थो विजेता मधुसूदनस्य पादारविन्दार्पित
चित्रपुष्पम् ।
ददर्श गङ्गाधरमौलिमध्ये बभूव वीरः
कृतनिश्चयार्थः ॥

என்ற ச்லோகம் அநுஸந்தேயம். இது மேற்கூறிய பொருளையே கொண்டது.

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில்,

वेदापहारगुरुपातकदैत्यपीडाद्यापद्विमोचन-
महिष्ठफलप्रदानैः ।
कोऽन्यः प्रजापशुपती परिपाति कस्य पादोदकेन
स शिवः स्वशिरो धृतेन ॥

என்று அருளினார். இதன் கருத்தாவது: பிரமனிடமிருந்து வேதங்களை மதுகைடபர் என்ற அஸுரர்கள் பிடுங்கிச் செல்ல அவர்களைக் கொன்று வேதத்தை பகவான் பிரமனுக்கு அளித்தான். லோக குருவும் பிதாவுமான பிரமனின் தலையைக் கிள்ளும்படியான மஹத்தான பாபத்தை ருத்ரன் செய்ய, பகவானின் ஸ்ரீ பாத தீர்த்தத்தைத் தலை

யில் தாங்கியதால் அவன் பரிசுத்தனு ஞன். இந்திரன் அஸுரர்களால் பீடிக்கப்பட்டுத் துன்பமடைந்த போதெல்லாம் எம்பெருமானுல் காப் பாற்றப்பட்டிருக்கிறுன். ஆக ப்ரஜா பதி, பசுபதி, இந்திரன் முதலியவர் களையெல்லாம் பகவான் தவிர வேறு யார் காப்பாற்ற முடியும்? இதி லிருந்து அவனே யாவரிலும் மேம் பட்டவன் என்பது தெளிவல்லவா? என்கிறபடி.

வரதராஜ பஞ்சாசத்தில் **श्रामन् जग** என்ற ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் இதைசிறிதுவேறுவிதமாக அருள்கிறுர் அங்குக்கூறியுள்ளதாவது:'அத்திகிரிப் பெருமானே! மிகவும் பெருமையுள்ள நீ கபடமான வாமனத் திருமேனியை அடைந்தவனுய் உலகத்தை அளப் பதற்காகத் திருவடிகளை மூவகை யாக வைத்தாய். பரிசுத்தமான உன் னுடைய திருவடி தீர்த்தத்தைத் தம் தலையில் ஏந்தியதால் பிராணிகள் இப் பொழுதும் சிவர்களாக (மங்களமான வர்களாக) ஆகின்றனர். 'அதாவது ஒரு ருத்ரன் மாத்திரம் தனதுபாபம் தீர்ந்து உன் திருவடி தீர்த்ததால் சிவன் (மங்களகரம்) ஆனுன் என் பதில்லை. எவர்கள் உன் பாத தீர்த்த மான கங்கையில் ஸ்நானம் செய்கின் றுர்களோ அவர்கள் யாவரும் சிவர் களாக (மங்களமானவர்களாக) ஆகி றுர்கள் என்றபடி.

இதையே இன்னும் சமத்காரமாக ஸ்வாமி தேசிகன் தேஹளீச ஸ்துதி யில் **सत्कुर्वतां तवपदं** என்ற ச்லோகத்தில் அருளியுள்ளார். அதன் கருத்தாவது; திருக்கோவலூர் எம்பெருமானே! நீ முன்பு த்ரிவிக்ரமனுய் உலகத்தை அளந்தபோது மேலுலகம் சென்ற திருவடியைப் பூஜித்த பிரமன் பெருமை பெற்றுன். திருவடியினின்று வந்ததிருமஞ்சன நீரைத்தன் முடியில் ஏந்திய சிவன் சிறப்புப் பெற்றுன். திருக்கோவலூர் இடைகழியில் வந்து தோன்றிய உன்திருவடிகளைப்பூஜித்து உன் திருவடியின் திருமஞ்சனத் திர்த் தத்தை முடியில் தாங்குபவர்கள் ஒரே ஸமயத்தில் இவ்வுலகில் சதுரானன னும் (நான்கு முகங்களையுடைய பிரம னும், சாதுர்யமாகப்பேசும் வாயுடை யவனும்) சிவனும் (ருத்ரனும், மங்கள மானவனும்) ஆக ஆகிவிடுகின்றனர்.

தர்மம் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்று இரண்டு விதமாக உள்ளது. மேல் வாரியாக நாம் அறிந்து கொள்ளும் தர்மம் ஸ்தூலமாகும். ஆழ்ந்து அறிய வேண்டிய தர்மம் ஸூக்ஷ்மமாகும். ஸ்தூல தர்மமறிந்த மனிதர்கள் உத் தமனென்று கொண்டாடப்படும் வாம னன் பலியை ஏமாற்றினுன் என்றே நினைப்பர். ஏனெனில் 'ஸூக்ஷ்ம தர்மத்தை உணர்வது மிகவும் அரிது. ஹ்ருதயத்திலிருக்கும் எம்பெரு மானே எது சரி, எது தவறு என்பதை அறிவான்' என்று சக்ரவர்த்தித் திருமகன் வாலிக்கு உரைத்தபடியும், யக்ஷப்ரச்னத்துக்கு பதிலில் 'தர்மத் தின் ஸூக்ஷ்மம் மிகவும் மறைந்து கிடக்கிறது' என்று யுதிஷ்டிரர் கூறிய படியும், ஸாதாரண மனிதர்கள் ஸூக்ஷ்ம தர்மத்தை அறிவதில்லை. ஆயினும் தர்ம ஸம்ஸ்தாபனத்திற் காக அவதரித்த வாமனன் ஸூக்ஷ்ம தர்மத்தை அநுஸரித்ததால் உத்த மன் எனக் குறையில்லை. இதைப் பொய்கையாழ்வார் கீழ்க்கண்ட பாசு ரத்தில் விளக்குகிறுர்.

> கொண்டானையல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்?
> மண்தாவென விரந்து மாவலியை — ஒண் தாரை
> நீரங்கைதோய நிமிர்ந்திலையே? நீள் விசும்பில்
> ஆரங்கை தோய அடுத்து?

'மூன்று அடி மண்ணைக் கொடு' என்று மாவலியிடம் யாசித்து, அவ னுல் வார்க்கப்பட்ட ஒளி பொருந்திய நீர்த்தாரை உன்னுடைய அழகிய திருக்கையில் விழுந்தவுடன் பரந்த ஆகாயத்திலிருக்கும் தேவர்கள் உன் னுடைய அழகிய திருத்தோள்களிலே அணையும்படியாக நீ விரைவாக வளர வில்லையா? உன்னுடைய உடை மையை உன்னதாக்கிக் கொண்ட உன்னைப் பழிக்கிறுர்களேயன்றி தன் னுடைமையல்லாததைத் தன்னதாக அபிமானித்து தானம் கொடுத்த மாவலியைப் பழிப்பவர்கள் யார்? ஒருவருமில்லை என்றபடி.

இங்கு ஆழ்வார் எம்பெருமானைக் குறித்து இவ்விதம் சொல்கிறுர்: பிரானே! உன் செல்வத்தில் ஒரு பகுதியாய் 'வாமனன் மண்' எனப் படும் இந்த பூமியை எனக்குத் தர வேண்டுமென்று ஒருவனிடம் யாசித் தாயே! 'அலம்புரிந்த நெடுந்தடக் கையமரர்வேந்தன்' என்கிறபடியே யாசகர்கள் போதும் போதும் என் னும்படி கொடுத்தே நீண்டகையை யுடையவனுன நீ அல்லவோ யாசித் தாய்! அதுதான் ஒரு குணவானிடம் யாசித்திருந்தால் **याच्ञा मोघा वरमधिगुणे** 'குணசாலியிடம் யாசித்துக் கிடைக் காமற் போனுலும் சிறந்தது' என்கிற படியே நன்றுயிருந்திருக்குமே! நீயோ ஓர் அஸுரனிடம் யாசித்தாய். **नाधमे लब्धकामा** 'கீழானவனிடம் யாசித்து விரும்பியது கிடைத்தாலும் சிறப் பில்லை' என்கிறபடியன்றே ஆயிற்று. உன்னுடைய அடியார்களாகிய இந்தி ராதிகளுக்கு அவர்கள் குடியிருப்பை வாங்கித் தருவதற்காக நீ யாசித் தாயேயல்லது உனக்கு ஓர் ப்ரயோ ஜனத்துக்காகச் செய்யவில்லை. அப் படியிருந்தும் உன்னைப்பழிப்பார் இவ் வுலகில் நிறைந்திருக்கிறுர்களே தவிர, தன்னதல்லாததைத் தன்னதாக்கிக் கொண்ட மாவலியைப் பழிப் பாரில்லையே!

வாமனன் மண்ணைத் தன்னதாக அபிமானித்திருந்தான் மாவலி. பிராட்டியைத் தனக்கென அபி மானித்த இராவணனைக் கொன்றுற் போல் மாவலியையும் கொன்றிருக்க வேண்டும். ஆனுல் நீ அப்படிச் செய்யவில்லை. அவனிடமுள்ள ஔ தார்யமென்னும் குணம் ஒன்றையே நோக்கி, அவன் குற்றத்தையும் உன் ஸ்வரூபத்தையும் பாராமல், உன்னை இரப்பாளனுக்கிக் கொண்டு நீயே

(40-ஆம் பக்கம் பார்க்க)

சென்ற இதழ்த் தொடர்ச்சி

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

கிருஷ்ணவதாரத்தைப் பற்றிய குறிப்புகள் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் மிகுதியாக உள்ளன.

ஆயர்குல தெய்வம் கண்ணன் (சிலப். 17; படர். 3) கண்ணனுக்கும், பலராமனுக்கும் கோயில்கள் இருந்தன. அங்கு அடியவர்கள் சென்று வழிபட்டனர். (பரி. 15; 49-66; சிலப். 10:9-12) கண்ணனையே திருமாலாகப் போற்றினர். (சிலப். 27 கருப்பம்) யமுனை நதியில், நபபின்னையோடு கண்ணன் குரவைக் கூத்து ஆடிய செய்தியை முன்னரே கண்டோம். ஆயர்பாடியில் இம்மூவரும் குரவைக் கூத்து ஆடினர். நப்பின்னையை மணக்க அடலேறுகளைக் கண்ணன் அடக்கிய வரலாறும் நாம் அறிந்ததே. (சிலப். 16:16; 17 படர்; கருப்ப முன்னிலை) கோபியருடைய ஆடைகளைக் கண்ணன் கவர்ந்து குறும்பு செய்த வரலாறு சிறப்பாகப் போற்றப்படுகிறது. (அகநா. 59)

துவாரகை பற்றிய குறிப்பும், கண்ணனின் மாமனை கஞ்சனைப் பற்றிய குறிப்பும் யசோதை பற்றிய குறிப்பும் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. (சிலப். 16:16; 27; ஆடுநர். 3:முன்னி. 1; சிலப். 22:163) கம்சன் பல்வேறு சூழ்ச்சிகள் செய்து கண்ணனைக்கொல்ல முயன்றமையும்விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. (சிலப். 17; படர்க்கை; கலி. 45:137; குழந்தையாக இருந்த காலத்தில் உரலில் கண்ணன் கட்டப்பட்டமையும், அதை இழுத்துக் கொண்டு போய், மருத மரங்களாக நின்ற அசுரர்களை அழித்ததையும் (சிலப். 12; உரை. 2(ஐயை செய்ததாகச் சொல்லப்படுகிறது.) சிலப். 17; பட். 3; உள்வரி 1: திரிக: கடபு. 2) பண்டைத் தமிழர் அறிந்திருந்தனர்.

வாணாசுரனின் மகள் உழை (உஷா) காமதேவன் மகனை அநிருத்திரனை அடைய விரும்பியது, அதனால் 'சோ' எனும் கோட்டையில் அடைக்கப்பட்டது, அவனை விடுவிப்பதற்காக வாணனோடு போரிட்டுக் கண்ணன் கொன்றதும், அதை யொட்டி, குடக்கூத்து ஆடியதையும் பற்றிய செய்திகள் பல பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. (சிலப். 17; படர். 1; நான். மணி; கடவுள் 2; பரி. 3; 83; சிலப். 6 54-55; மணி 6:7 29:390). கண்ணன் குடக்கூத்து ஆடிய பொழுது, காமன், பேடி வடிவில் கூத்தாடியமையும் குறிப்பிடப்பட்டுள்ளன (சிலப். 6:7) வாணனோடு மல்போர் புரிந்தபொழுது, கண்ணன் ஆடிய ஆடல், மல்லின் ஆடல் என்று அழைக்கப்படுகிறது. (சிலர் 6:57)

பாண்டவர்க்காகக் கண்ணன் செய்த பல உதவிகளான தூது சென்றதுமுதலாகத்தேரோட்டியது ஈறாகப் பல்வேறு செய்திகள் நயமுடன் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. (சிலப். 6:49 17; முன்னி. 3:படர். 3)

திருமாலின் வேறு சில செயற்கருஞ் செயல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன. அவுணரை அழித்தமை (மதுரைக். 590-591. பரி. 39-40). சூரியனை அவர்கள் மறைத்த பொழுது, அவனை விடுவித்தமை, பனங்காய்கள் போல் அவுணர்தலைகளை உருளச் செய்தமை போன்று பல கதைக் குறிப்புகள் அந்நூல்களில் இடம் பெற்றுள்ளன. (கலி. 13 : 1-3; பரி. 2:40-49; புறநா. 174:1-5).

'கூந்தல்' எனும் பெயருடைய அவுணன், குதிரை வடிவில் வந்து திருமாலை எதிர்த்த பொழுது, அவனுடைய வாயைக் கிழித்து அவனைக் கொன்று குவித்தார். (பரி. 3:31-32) இதே செய்தியைப் பரிபாடலும் சுட்டுகிறது. ஆனால், அங்கு இறைவனுக்கும் 'கூந்தல்' என்பதே பெயராகவும், அவுணனுக்கும் 'கூந்தல்' என்பதே பெயராகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

'' கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல்
எரிசினம் கொன்றோய்''

(பரி. 3:31-32)

பேராசிரியர் : க. த. திருநாவுக்கரசு.
சென்னை.

அதாவது 'கேசி' எனும் பெயருடைய அசுரன் குதிரை வடிவம் கொண்டான். அவனைக் கொன்ற திருமால் 'கேசவன்' எனும் பெயரைப் பெற்றார் என்பது இந்த அடிகளுக்குரிய பொருளாகும். இதைப் பற்றிப் பேராசிரியர் வி. வரதாச்சாரி அவர்கள் தெரிவித்துள்ள கருத்து, இந்த அடிகளில் அமைந்துள்ள பிழைபாடான கருத்தினைப் புரிந்துகொள்ள உதவும். 'எப்படியோ ஒரு பிழைபாடான கருத்து பரிபாடலில் (3:31-32) புகுந்து இருக்கிறது. மாயோனால் கொலை செய்யப்பட்ட அவுணனுக்குக் 'கேசின்' என்பது பெயர். அதனால் இறைவன் 'கேசவன்' எனும் பெயரைப் பெற்றான். 'கேசின்' எனும் சொல்லிற்குத் தலைமுடி (மயிர்) என்பது பொருள் அன்று. ஆனால், குதிரை வடிவு கொண்ட அசுரனுக்கு நிறைய முடி இருந்தமையால், 'கேசி' என்று சுட்டப்பட்டான் எனக் கருதுவதாகத் தெரிகிறது. கேசின என்பதைச் சிறப்புப் பெயராகக் கொள்ளுவதே பொருத்தமாகும்' (V. Varadhachari, 'A Note on the Religious and Philosophical content of the Paripadal' in the Ayuvukkovai, Annamalai Nagar, 1971, pp.

404-405). எனும் விளக்கம் நமக்குப் புதிய ஒளி தருவதாகும். கேசத்து (கூந்தலு)க்கும், கேசினுக்கும் உள்ள வேறுபாடு இதனால் எளிதில் புலனாகிறது.

பாற்கடல் கடைந்த வரலாறு விரிவாகப் பல பாடல்களில் வருணிக்கப் பட்டுள்ளது. ஆனால், வாசுகிக்குப் பதிலாக ஆதிசேஷனைக் கயிறாகக் கொண்டு கடைந்ததாகவும் ஒரு பாட்டு தெரிவிக்கிறது. (பரி. 1:65-66; சிலப். 17, பா. 2; முன்னி. 1) திருமால், அசுரருக்கு அமிழ்தத்தை வழங்காது வஞ்சித்தமையும் சுட்டப் படுகிறது (புறநா. 378:19; பழ. 2) திருமால் (கண்ணன்) உலகினை; விழுங்கியதும் (சிலப். 13:65), சூரியனைத் தம் சக்கரத்தால் மறைத்தமையும் (பரி. 3:65) சந்திரனை இராகு கேதுகளிடம் இருந்து காப்பாற்றியமையும் (பெரும். 383-381; கலி. 104; 37-38) சிறப்புமிகு சாதனைகளாகச் சுட்டப்பட்டுள்ளன.

திருமாலை, அம்பாளாகக் கூறும் மரபும் உருவாகியுள்ளதைக் காணுகின்றோம். (பரி. 3:44-45; சிலப். 12 உரைப். 9) பழந்தமிழ் இலக்கியங்களுள், திருமாலின் பத்து அவதாரங்களுள், மத்சய, கல்கி(முதலும் முடிவும்) அவதாரங்களைப் பற்றிய குறிப்புகளைக் காணோம். 'அக்காலத் தமிழ் மக்களுக்கு அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ள வாய்ப்பு இல்லை. எனக் கூறலாமா? அல்லது அக்காலத்திய வடமொழிப் புராணங்களில் இந்த இரு அவதாரங்களும் இடம் பெறவில்லை எனக் கருதலாமா? எனும் ஐயங்கள் எழுகின்றன. அறிஞர் டி. டி. கோசாம்பி, 'மத்சய, புத்த, கல்கி அவதாரங்கள் மிகவும் பிற்பட்ட காலத்திய சிந்தனை' (D.D.Kosambi, The Avatara Syncretism and possible sources of Bhagavad Gita, JBBRAS, Vol 24.25; pp. 121-134) என்று தெரிவித்துள்ளமையை இங்கு நினைவு கூறலாம்.

'பழந்தமிழ் நூல்களில் காணப் படும் அவதாரங்களைப்பற்றிய செய்திகள், வடநாட்டு ஆரியர்களால் படைத்துக் கொள்ளப்பட்டவை. அவற்றுக்கும் தமிழருடைய திருமாலுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை' (மாணிக்கவாசகர் வாலாறும் கால ஆராய்ச்சியும், தொ. 2; பக். 447) என்று மறைமலை அடிகள் அறிவித்துள்ளார்.

ஆனால், வட இந்தியப் பழங்குடி மக்கள் (ஆரியர் அல்லாதார்) இடத்து வழங்கிய தொன்மைக் கதைகளைப் புராணகால (ஆசிரியர்கள் சிற்சில மாற்றங்கள் செய்து தங்கள் மகா விஷ்ணுவின் வீரதீரச் செயல்களோடு, இணைத்துப் போற்றத் தொடங்கினர். இவ்வாறு உருவானவையே அவதாரக் கதைகள்' என்று கோசாம்பி கருதுகிறார். (Note-No. 124., C. Eliot, Hinduism and Buddhism).

மறைமலை அடிகளின் கருத்தை அரண் செய்கின்ற முறையில், 'விருஷ்ணி குல மக்களுள் ஒரு சில பிரிவினராகிய அபிரர் தென்னாட்டு மதுரைக்குக் குடியேறி இருக்கலாம். அவர்கள் மூலமாக வடநாட்டுப் பழங் கதைகளும் பழக்க வழக்கங்களும் தெற்கே பரவியிருக்கக் கூடும்' (D.C. Sircar, 'Early History of Vaishnavism' in the Cultural Heritage of India, Vol. 3. p. 142) என்று டி. சி. சர்க்கார் தெரிவித்துள்ளார். இவருடைய கருத்தினை இந்த ஆய்வாளன், பின்வரும் காரணத்திற்காக உடன்படலாம் என நினைக்கின்றேன்.

கலித்தொகைக்கு முற்பட்ட சங்கப் பாடல்களில் 472 முல்லைத் திணைப் பாடல்கள் உள்ளன. அவை யாவும் ஆயர் வாழ்க்கையை அழகுறச் சித்திரிக்கின்றன. ஆனால் அவற்றில் 'ஏறுதழுவலைப்' பற்றிய குறிப்பு ஒன்று கூட இடம் பெறவில்லை.

கலித்தொகையில் 'முல்லைக்கலி' பாடல்கள் பதினேழு உள்ளன. அவற்றுள் பத்துப் பாடல்களில் அடலேறுகளை அடக்கிய ஆண் சிங்கங்களுக்கே, ஆயர் மகளிர் திருமணம் செய்து கொடுக்கப்படுவர் என்னும் எண்ணம் இழையோடிச் செல்லுகிறது. வடநாட்டு கிருஷ்ணன், நக்நசித்தின் கொல்லேறுகளை அடக்கி, சத்தியவதியை மணந்த கதையையே நினைவு படுத்துகின்றன. தமிழில் மூன்று பாகவத புராணங்கள் உள்ளன. செவ்வைச் சூடுவார் (கி. பி. பதினாறாம் நூற்றாண்டு) அதே நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த நெல்லிநகர் அருளாநாசர் எனும் மதுரகவி வரதராசர் பாகவத புராணத்தைத் தமிழில் பாடியுள்ளார். பதினெட்டாம் நூற்றாண்டில் ஆரியப்பப் புலவர் என்பவரும் பாகவதத்தைத் தமிழில் தந்துள்ளார்.

இவர்களுள், செவ்வைச் சூடுவாரும், ஆரியப்பப் புலவரும் கண்ணன் ஏறுகளை அடக்கி சத்தியவதியை அடைத்த வரலாற்றை மட்டும் பாடியுள்ளனர். வரதராசரோ, நப்பின்னையையும், சத்தியவதியையும் ஏறுகளை அடக்கியே, கண்ணன், 'கன்யா கல்கமாகப் பெற்றான்' என்பதை விரிவாக வருணித்துள்ளார். (க. ரா. திருநாவுக்கரசு 'கண்ணனின் காதலி' வாழ்வும் இலக்கியமும், பக். 63-64) இந்தப் பின்னணியில் நோக்குகின்ற பொழுது, வட இந்தியாவின் மேற்குப் பகுதியில் வாழ்ந்து, பையப் பையத் தெற்கு நோக்கி வந்த அபிரர் (விருஷ்ணி குலத்தில் வந்தவர்) எனும் ஆயர் குடி மக்களிடம் 'ஏறுதழுவல்', ஒரு வீர விளையாட்டாக இருந்ததை அறிகிறோம். எனவே, அறிஞர் சர்க்கார் கூறுவதைப் போல, அந்த ஆயர் மரபினர், தமிழ்நாட்டிற்கு வந்த பொழுது இங்கும் அந்தப் பழக்கம் பரவி இருக்கலாம் எனக் கருத இடமுண்டு. (விருஷ்ணி குலமக்கள் அபிரர் ஆகியோர் ஆரியர் அல்லர். வடமேற்கு இந்தியாவில் வாழ்ந்த பாரசீக-இந்தியப் பழங்குடி மக்களின் கலவை இனத்தவராவர்).

### தமிழ் மரபு வழிக் கதைகள் :

திருமாலைப் பற்றிப் பழந்தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள கதைகள் சில சமஸ்கிருத நூல்களில் காண இயலவில்லை. அவை தமிழருடைய எண்ணப் போக்கையும் கற்பனைத் திறனையும் பிரதிபலிக்கின்றன. நப்பின்னை-கண்ணன் காதல் வரலாறு, குருந்தமரத்தை ஆற்றில் நீராடிய கோபியருக்காக வளைத்து, ஆடைகளைத் தம் மானத்தை இழக்காது, அவர்களையே எடுத்துக் கொள்ளச் செய்தமை, சிம்மாலிகன் தலையை வெட்டியமை போன்ற கதைகள் தமிழ் மரபு வழி வந்தத் தொன்மங்களாகவே தோன்றுகின்றன. இவற்றை வடமொழி காப்பியங்களிலோ, புராணங்களிலோ காண இயலவில்லை என்பது அறிஞர் மு. இராகவையங்காரின் துணிவாகும். (ஆராய்ச்சித் தொகுதி பக். 60-61).

### இறைவனுடைய ஐவகைக் காட்சி :

கடவுளை ஐவகை வடிவங்களில் வழிபாடு செய்யும் வழக்கம் சங்க காலத்தின் கடைசிப் பகுதியில் வழக்கிற்கு வந்துள்ளதைக் காணுகின்றோம். பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள் நீங்கலாக உள்ள மற்றும் பதினென் கீழ்க் கணக்கு நூல்கள் ஆகியவற்றுள் பிற்கால ஆகமங்களில் குறிப்பிடப்படும் வழிபாட்டு முறைகளில் தொடக்க நிலைகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

பாஞ்சராத்ர நூல்களுள் மிகவும் பழமையான அபிர்பிதந்ய சமிதையில், கடவுளின் ஐவகை வடிவங்கள் விளக்கப்பட்டுள்ளன. அவை பரத்துவம் (அறிவின் எல்லை கடந்த நிலை), வியூகம் (தோன்றல்) விபவம் (திருவுருக் கொள்ளல்), அந்தர்யாமி (உள்ளார்ந்த நிலை) அர்ச்ச (உருப) என்பனவாகும். இந்த ஐந்து வழிபாட்டு நெறிகளையும் முறைப்படுத்தப்பட்ட சிந்தனையாகத் தருவதே 'பாஞ்சராத்ரம்' எனப்படும். (Suvira Jaiswal, op. cit. pp. 12-33) இந்த விளக்கத்தை, அத்துறை அறிஞர்களுள் பலர், சிறந்ததாகப் போற்றுகின்றனர். (Suvira Jaiswal, pp. 42-43 & Serader, Introduction to Pancaratra p. 25) பரிபாடலிலும், சிலப்பதிகாரத்திலும், திருமாலைப் பற்றிய பாடல்கள் இம்முறையில் அமைந்துள்ளன.

### திருமாலின் முழுமுதற் பண்பு :

மனிதனுடைய அறிவினால் கண்டு அறிய இயலாத மேன்மை உடையவர் திருமால் என்பதைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன. இந்த நிலையில் பாற்கடல் நடுவே, பரமன் ஆதிசேஷன்மீது அறிதுயில் கொண்டுள்ளான். இதனையே வைகுந்தமாகக் கருதுகின்றனர் (பரி. 13:26-27). திருமகளும் உடன் இருப்பதைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. (பரி. 1:8) திருமாலின் சங்கு, சக்கரம் முதலிய படைக்கருவிகளும், கௌஸ்துபம், துழாய்மாலை போன்ற அணிகளும் பாம்பு அணிகளும், கருடவாகனமும் குறிப்பிடப்பட்டுள்ளன. இறைமை, வீரம், படைப்பாற்றல், பேரொளி போன்ற ஆறு தெய்வீகப் பண்புகளும் வாய்ந்தவராகத் திருமால் காட்சி தருகிறார். (பரி. 1:8,9. 55:9:2: 8-31: 49,60,15. 54-61)

### வியூகம் :

திருமாலின் நால்வகைத் தோற்றங்களைப் பரிபாடல் பேசுகிறது. அவை வாசுதேவன், சங்கர்ஷணன், பிரிதியும்னன், அநிருத்தன் என்பனவாகும். இதனை,

> "செங்கண் காரி! கருங்கண் வெள்ளை!
> பொன்கண் பச்சை! பைங்கண் மாஅல்"
>
> (பரி. 3:81-82)

எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

'செங்கண் காரி' பரத்துவ நிலையில் உள்ள வாசுதேவரைக் (கண்ணன்) குறிக்கிறது. 'கருங்கண் வெள்ளை' கண்ணனுடைய அண்ணனை பல தேவரையும், 'பொன்கண் பச்சை' மகனகிய காமனையும் 'பைங்கண் ஆல்' பேரனுகிய அநிருத்தனையும் சுட்டி நிற்கின்றன. இந்த வடிவங்கள் ஒவ்வொன்றிற்கும் தனித் தனியான கடமைகள் இருப்பதை அறிகிறோம். அவை முறையே படைத்தல், காத்தல், அருளல், மீட்டல் என்பனவாகும். வாசுதேவருக்கு முன்னரே கண்ட அறுவகை தெய்வீகப் பண்புகள் எந்நிலையிலும் உண்டு. மற்ற மூவரும் முறையே இருவகைப் பண்புகளைக் கொண்டவர்களாகவும் கருதப்படுகின்றனர் (R. G. Bhandarkar, op. Cit. p. 53) முதல் இரு வியூக வடிவங்களான கண்ணனையும், பலராமரையும் பற்றிய பல செய்திகளை நாம் முன்னரே கண்டோம்.

### திருமாலின் அவதாரங்கள் :

உலகில் உண்டாகும் தீமைகளைக் களைந்து, அறத்தை நிலை நாட்ட, கர்ம யுகங்கள் தோறும் உலகில் தோன்றுவதாகக் கீதையில், கண்ணன் திருவாய் மலர்ந்து அருளியதற்கேற்பப் பரமன் பலமுறை இம்மண்ணுலகிற்கு வந்து அருள்புரிந்த வரலாறுகளுள் முதன்மையானவை பத்து. பரிபாடலில் இராமாவதாரம், பரசுராமவதாரம், மத்சய, கல்கி அவதாரங்களைப் பற்றிய செய்திகள் காணப்பெறவில்லை. ஆனால், அன்னஅவதாரம் பற்றிய குறிப்பு உள்ளது. (பரி. 3:25-26).

### உள்ளார்ந்து உறைதல் (அந்தர்யாமி) :

நல்லோரைக் காக்கவும், அல்லோரை அழிக்கவும், அறத்தை நிலை நாட்டவும் பல்வேறு வழிகளில், பரம்பொருள், பல்வேறு வடிவங்களை எடுத்து இம்மண்ணுலகிற்கு வருகிறது. அதே பரம்பொருள் எல்லா உயிர்களிலும் கண்ணுக்குப் புலனாகாத வகையில் உள்ளார்ந்த நிலையில் உறைகிறது. ஒவ்வொருவருடைய இதயக் கமலத்திலும் அப்பரம்பொருள் நின்று நிலவுகிறது. ஆனால், மெய்யுணர்வு பெற்ற யோகிகளாலேயே, அதனை உணர்ந்து, போற்ற இயலு

கிறது. ஆன்மாக்கள், துறக்கத்திற்கோ, நரகத்திற்கோ போகின்ற பொழுது அதுவும் அவற்றுடன் செல்லுகின்றது. இறைவன் உள்ளார்ந்து உறையும் தத்துவத்தைப் பரிபாடல் பல நிலைகளில் வெளிப்படுத்துகிறது. (பரி. 2:24-25) போற்றித் திருவகவல் போன்று, இந்த அந்தர்யாமித் தத்துவத்தைக் கடுவன் இளவெளினனார்,

"தீயினுள் தெறல்நீ! பூவினுள்
நாற்றம் நீ!
கல்லினுள் மலியும் நீ! சொல்லினுள்
வாய்மை நீ!
அறத்தினுள் அன்பு நீ! மறத்தினுள்
மைந்து நீ!
வேதத்து மறை நீ! பூதத்து
முதலும் நீ!
வெஞ்சுடர் ஒளியும் நீ! திங்களுள்
அணியும் நீ!
அனைத்தும் நீ! அன்னநின் உட்
பொருளும் நீ!
உறையும் உறைவதும் இயையே!
உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமார்
அனையை!
முதல்முறை, இடைமுறை, கடை
முறை தொழிலின்
பிறவாப் பிறப்பிலை! பிறப்பித்
தோரிலையே!
(பரி. 3:63-72)

எனப் பாடியுள்ளார். அகங்குழைந்து உருகிப் பாடியுள்ள ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு முன்னோடியாக இது அமைந்து இருக்கிறது.

விக்கிரக (அர்ச்ச) வழிபாடு :

வாழ்க்கையில் இலட்சியங்களை அடைய விரும்பும் அன்பர்கள், பரம் பொருளை வழிபட விக்கிரக வழிபாட்டை நம் முன்னோர்கள் வகுத்து அளித்துள்ளனர். பாஞ்சராத்ர ஆகமங்கள் கோயில் கட்டும் முறைகளுக்கும், தெய்வத்திருமேனிகளைச் செய்வதற்கும் விரிவாகப் பல்வேறு விதி முறைகளை வகுத்து அளிக்கின்றன. கி.மு. ஆறும் நூற்றாண்டிற்கு முன்பே, இத்தகைய வழிபாடு இருந்தது என்றும், இது வேத நெறிக்கு உட்படாத வழிபாட்டு முறை என்றும் அறிஞர் கூறுகின்றனர். (Das Gupta, A History of Indian Philosophy, Vol. 3; p. 19).

இறைவனை விக்கிரக வடிவில், பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு வேத வேள்வி நெறிக்கு மாறானது; ஆகம வழிபட்ட பக்தி நெறியின் தலையாய பண்பு இது' ('Facial and Cultural Intermixture in India' in Tamil Culture., Vol. 8; p. 319). என்பது சுநீத குமார சாட்டர்ஜியின் துணிவாகும்.

பரிபாடலில் கோயில் வழிபாடு பற்றிய குறிப்புகள் மிகப் பலவாக உள்ளன. திருமாலிருஞ்சோலை (அழகர்) மலையில் உள்ள கோயிலைப்பற்றிய விளக்கங்கள்பல உள்ளன. அங்கே அக்காலத்தில் கண்ணனுக்கும் பல தேவருக்கும் ஒரே கோயிலில் இரு கருவறைகள் இருந்தன. (பரி. 15:36, 64,66)

திருமாலின் பல்வேறு வடிவங்களைப் பற்றிய விளக்கங்களும், தெய்வத்திடம் பக்தி நிலையில் வேண்டப்படும் பக்தர்களின் மனநிலையைப் பற்றிய குறிப்புகளும், வழிபாட்டில் பின்பற்றப்பட்ட சடங்குகளைப்பற்றிய செய்திகளும் பரிபாடலில் நிறைய உள்ளன. இவையாவும், உருவ வழிபாட்டிற்கு மதிப்பும் முக்கியத்துவமும் பண்டைத் தமிழர்கள் கொடுத்துள்ளனர் என்பதைத் தெரிவிக்கின்றன.

சிலப்பதிகாரத்தில் திருமாலின் கிடந்த கோலமும், நின்ற கோலமும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் நோக்கையும் போக்கையும் முன்கூட்டியே தெரிவிப்பனவாக உள்ளன. இளங்கோவடிகள் காலத்திலேயே, திருவரங்கத்தில்திருமாலின் கிடந்தகோலத்தை (அரவணையில் பள்ளி கொள்ளும் அரங்கநாதரை),

"நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்
பால் விரிந்து அகலாது, படிந்தது
போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை
அருந்திறல்
பாயல் பற்றிப் பலர் தொழுது ஏந்த;
விரிதிரைக் காவிரி வியன்பெருந்
துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ண
மும்"
(சிலப். 11:35-40)

என இளங்கோவடிகள் சித்திரித்துள்ளார்.

அடுத்து. திருமால் நின்ற கோலத்தில் திருவேங்கடத்தில் காட்சி தருவதை,

"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத்
தானத்து
மின்னுக் கோடி உடுத்து, விளங்குவிற்
பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும் பால்வெண்
சங்கமும்
நலங்கிளர் ஆரம் மார்பிலில் பூண்டு
பொலம் பூவாடையில் பொலிந்து
தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற
வண்ணமும்"

என நம் மனக்கண் முன்னால் திருவேங்கடவனைக் கொண்டு வந்து நிறுத்துகிறார் இளங்கோ.

திருமாலின் அர்ச்சாவதார வழிபாடு அக்காலத்திலேயே, முழு நிறை வடிவத்தைப் பெறக் கூடிய நிலையை அடைந்து விட்டதை மேற்கண்ட கோலங்கள் தெரிவிக்கின்றன.

(தொடரும்)



# திருப்பாவையின் தத்துவக் கருத்துக்கள்

தத்துவம் என்ற சொல்லுக்கு 'அதன் தன்மை' என்று பொருள். 'மெய்ப்பொருள் காண்பது அறிவு' என்று வள்ளுவர் சொல்வது போல, ஒருவரின் சிந்தனை வளர்ச்சிக்கேற்ப அவன் ஒவ்வொரு பொருளையும் நுட்பமாக ஆராய்ந்து பார்த்து உண்மையைக் காணுவது சிறந்தது; போற்றற்குரியது. அம்முறையில், இயற்கையை மனமாரக் கண்டு களிப்பதைவிட, அதில் தத்துவத்தைப் புகுத்தி அறிவுக் கண் கொண்டு பொருட் சிறப்பைக் கூறுவது மிகவும் சிறந்தது. ஆகவே ஒரு பாடலைப் புறநிலையில் மேற்போக்காகப் பார்ப்பதைவிட அதில் அடங்கியுள்ள தத்துவப் பொருள்களை ஆழ்ந்து அறிந்து கற்பதால் பாடலின் சுவை மிருதிப் படும். இம்முறையில் திருப்பாவையில் காணப்பெறும் தத்துவக் கருத்துக்களை இக்கட்டுரையில் காண்போம்.

திரு. க. சுகுமாரன், எம்.ஏ.
திருவாரூர்.

ஆண்டாள் சமயத் தத்துவத்தைக் குறியீட்டு நிலையில் (Symbolic level) ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆழ்வாரைத் திருவாய்ப்பாடியாகவும் அங்குள்ள பெண்களை இடைப்பெண்களாகவும், தன்னை அவர்களிலே ஒருத்தியாகவும் வட பெருங்கோயிலை ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகையாகவும், வட பெருங் கோயிலுடையானைக் கிருஷ்ணனாகவும் பாவித்துப் பாவைப் பாடல்கள் வடிவில் தந்துள்ளார்.

திருப்பாவையை உபநிடதங்களின் சாரம் என்பர். வேதக் கருத்துக்களையெல்லாம் நல்ல தமிழில், ஆயப் பாடிப் பெண் பேச்சில் வைத்துப் பாடியுள்ளார். சில எடுத்துக்காட்டுக்களைக் கீழே காண்போம். "தீ (ஆகாயம்) அவனது தலை; சூரியனும் சந்திரனும் அவனது கண்கள்"...என்னும் முண்டக உபநிடதத்தின் (2-1-4) கருத்து "மதியம்போல் முகத்தான்"







# ஸ்ரீ மாமேரு தியான நிலையம்

உலகிலேயே ஸ்ரீ சக்ர மாமேருவுக்கு முதன் முறையாக ஒரு வழிபாட்டு நிலையம். சென்னை — தாம்பரத்திற்கு 20 கிலோ மீட்டர் தூரத்தில், பண்ருட்டிக் கண்டிகை என்ற சேஷத்திரத்தில் ஸ்ரீநகரம் என்ற பெயரில் ஸ்ரீ வித்யா உபாசகர் ஸ்வாமி முருகபூஷணம் அவர்களின் பெருமுயற்சியால் உருவாகி வருகிறது.

ஸ்ரீ பரமேஸ்வரனின் அம்ஸமாகவே கருதப்படும் ஸ்ரீ ஆதிசங்கரர் உலக குருவாக அவதரித்து ஷண்மத ஸ்தாபனம் செய்து அவரால் சௌந்தர்ய லஹரியில் விரிவாக விளக்கப்பெற்ற வழிபாடே ஸ்ரீசக்ர மாமேரு வழிபாடும், தியானமும் ஆகும்.

இந்த ஸ்ரீ சக்ர மாமேருக்குரிய வழிபாடு மற்றும் தியான நிலையம், ஸ்ரீ மாமேருவை நடுநாயகமாக கொண்டு, அதன் 16 அங்கங்களை சுற்றிலும் 16 மண்டபங்களிலும் அமைத்து உலகிற்கே புதுமையான முறையில் உருவாகி வருகிறது. இதன் அடித்தளத்தில் ஒரு தியான மண்டபமும் அதன் மையத்தில் ஸ்ரீசக்ரமும் அதைச் சுற்றிலும் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தசக்தி உபாசகர் சர் ஜான் வுட்ராஃப் அவர்களின் தமது, மகோன்னதமான "சர்பெண்டபவர்" என்ற நூலில் விளக்கியுள்ளபடி குண்டலினி யோக விளக்க வரைப்படங்கள் இடம் பெறுவது சாதகர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

ஸ்ரீமாமேரு தியான நிலையத்திற்குரிய நிலத்தை ஸ்ரீ ஸ்வாமி முருகபூஷணம் அவர்கள் தாமே சொந்தமாக வாங்கி அமைத்து வருகிறார்கள். இந்தத் தெய்வீகத் திருப்பணி காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் மூவரும், சிருங்கேரி மகா சந்நிதானம், சந்நிதானம் இருவரும் மற்றும் திருமுருக கிருபானந்த வாரியார் போன்ற மகான்களின் ஆசியோடு சாஸ்த்ரோக்தமாக நடந்தேறி வருகிறது. இந்தப் புனித ஸ்தலத்தில் ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமம் பாராயணம் செய்து ஸ்ரீசக்ர மாமேருவை வலம் வந்து வழிப்பட்டால் பக்தர்களின் துன்பங்கள் பனிபோல் விலகும்; நினைத்த காரியங்கள் நடந்தேறும்.

இதைத்தவிர, இவ்வமைப்பில், ஒரு திருமணக்கூடம், நூல் நிலையம், மருத்துவமனை, அச்சகக்கூடம், அபலைப்பெண்கள் காப்பகம், இப்படி சமூகத்திற்குப் பயனுள்ள பல திட்டங்களும் சேர்ந்துள்ளன.

ஸ்ரீமாமேரு டிரஸ்டில் ரூ. 1000/- செலுத்தி ஆயுள் உறுப்பினராகவோ, ரூ. 100/- செலுத்தி ஆண்டு உறுப்பினராகவோ சேர்ந்து அன்னை பராசக்தியின திருப்பணியில் பங்கு கொள்ளுமாறு அன்பர்களை வரவேற்று அழைக்கிறோம். நன்கொடைகளுக்கு வருமானவரி இலாக்கா பதிவு எண் செக்ஷன் 80-ஜி/1146/111/28/82 தேதி 14–7–1982 ஆம் ஆணையின்படி வருமான வரிச் சலுகையும் உண்டு.

**மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்க :**

**தலைமைச் செயலகம் :**

டிரஸ்டி: ஸ்ரீ வித்யா உபாசகர் ஸ்வாமி ஸ்ரீ முருகபூஷணம் அவர்கள்

**ஸ்ரீ மாமேரு டிரஸ்ட், நெ. 72, கௌடியா மடம் ரோடு, இராயப்பேட்டை, சென்னை - 600014. தென் இந்தியா.**

**ஆலோசனைக் குழு:**

தலைவர்: ஸ்ரீ **T. T.** வாசு அவர்கள் தொழிலதிபர்

**செயலர்:** ஸ்ரீ **T.** நாகராசன் அவர்கள் - **பொருளாளர் :** ஸ்ரீ அரிமா **M.** ஹரிராம் அவர்கள்
Dy. Commr., H. R. & C. E. (Retd)

**ஸ்ரீ நகரம் தொலைபேசி: 34.**

தலைமைச் செயலகம் தொலைபேசி: **861254.**

**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

(திருப்பாவை: 1) என்ற தொடரில் அமைக்கப்பட்டுள்ளது. "காப்பவனுகிய விஷ்ணு, யாராலும் ஏமாற்ற முடியாதவனுகிய அவன் மூன்றடிகள் வைத்தான்" என்ற ரிக் வேதக் கருத்து (1-22-18) "ஓங்கியுலகளந்த உத்தமன்" (திருப்பாவை; 3) என்ற தொடரிலும் எடுத்தாளப் பெற்றுள்ளன. "எல்லாம் வல்ல அவனே காரணன், எல்லா உயிர்களுடைய உறுப்புக்களின் தலைவர்களின் தலைவன் அவனே; அவனுக்குத் தாயுமில்லை தந்தையுமில்லை" என்ற ஸ்வேதாஸ்வதர உபநிடதத்தின் கருத்து "ஊழி முதல்வன் உருவம்" (திருப்பாவை; 4) என்ற தொடரால் உணர்த்தப்படுகின்றது. பிரகிருதியிலிருந்து மாயன் எல்லாவற்றையும் அனுப்பினுன். எனவே பிரகிருதி என்பது மாயை எனவும் பெருந்தலைவனுகிய கடவுளேமாயன் (மாயையைக் கட்டுப்படுத்துபவன்) என வுணர்க" என்ற கருத்து "மாயனை மன்னு வட மதுரைமைந்தனை" (திருப். 5) என்று வெளிப்பட்டுள்ளது. "எல்லாத் தீயச் செயல்களும் நீக்கப்பெற்ற நிலையில் விடுதலைபெற்ற உயிர்வீடடைகிறது" எனவும் (4-11-2)" இஷிகக் கொடியின் மென்மையான நார்கள் தீயில் போட்டவுடன் எவ்வாறு எரிக்கப்படுகின்றனவோ அதுபோலவே ஒவ்வொரு விடுதலை பெற்ற ஆன்மாவின் தீவினைகளும் எரிக்கப்படுகின்றன" (5-2-3) எனவும் வரும் சாந்தோக்ய உபநிடதத்தின் கருத்துக்கள் "போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும்" (திருப்: 5) என்ற வரிகளில் சுட்டப்பெற்றுள்ளன. 'போய பிழை' சஞ்சித கருமத்தையும் 'புகுதருவான் நின்றன' ஆகாமிய கருமத்தையும் சுட்டும். இவ்வாறே ஒவ்வொரு பாசுரத்திலும் வேதக் கருத்துக்கள் குறிக்கப் பெற்றுள்ளதைக் காணலாம்.

இறைவனை அடைய வேண்டிய பயனையும் அவனை அடையும் உபாயமும் சொல்லப்பெற்றதாகத் திருப்பாவையின் உள்ளுறை விளக்கப்பெறுகிறது இவற்றை முறையே ப்ராப்யம் எனவும் ப்ராபகம் எனவும் குறிப்பிடுபவர். திருப்பாவை நூலின் உட்கருத்தான இவை முதற்பாசுரத்திலேயே உணர்த்தப்படுகின்றன எனவும் உரைப்பர். 'மார்கழித் திங்கள்' என்பது முதல் 'சிறுமீர்காள்' என்பது வரை ப்ராப்யம் சொல்லிற்று எனவும், 'கூர்வேல் கொடுந்தொழிலன்' முதல் பாசுர முடிவரை ப்ராபகமாகிய உபாயம் சொல்லிற்று எனவும் விளக்குவர். பயனைப் பெற உபாயமாகப் (ப்ராபகம்) பக்தி நெறியையும், பிரபத்தி (சரணுகதி) நெறியையும் வேதாந்தங்களில் விரித்துள்ளமையைக் காணலாம். வேறு பயன் கருதாது பக்தி செய்வோருக்கு இறைவன் பயனை அளித்து உபாயமாயிருப்பான்; அவன் தன்னையே (உபாயமாகப்) பற்றினுர்க்குத் தானே உபாயமாக இருப்பான் என விளக்குவர். இவ்விரு நெறிகளில் பிரபத்தி நெறி என்பது வைணவக் கோட்பாடு. இங்கு இறைவனையே உபாயமாகக் கொள்வது அடிப்படை. இந்நெறி பின்பற்றுவோர்க்கு வேறு தகுதிகள் வேண்டா. இறைவனிடத்து இச்சை பிறக்கையே போதுமானது. ஆசையுடைமையே போதுமானது. இதனுலே "நீராடப் போதுவீர் போதுமினே" என அழைக்கிறுர் ஆண்டாள். விருப்பமுடையவர் வாருங்கள் என்பது கருத்து. இதனுல் இந்த நெறி பின்பற்றுவோரது (அதிகாரிகள்) இலக்கணமும் சொல்லப்படுகிறது இம் முதற் பாசுரத்தில். முற்சுட்டப்பெற்ற ப்ராபய ப்ராபகங்கள் எங்ஙனம் அமைந்துள்ளன என்பதை நோக்குவோம்.

(அ) ப்ராப்யம் (அடைய வேண்டிய பயன்)
மார்கழித் திங்கள் :

கண்ணனுக்கு உகந்த மாதம் இது. ("மாஸா நாம் மார்கஸீர் ஷோஹகம்" "மாதங்களுள் மார்கழி மாதம் ஆகிறேன்" என்பது கீதை) கண்ணனுடன் தங்களைக் கூட்டின காலத்தைக் கொண்டாடுகிறுர்கள். அடைய வேண்டிய பயன் கிட்டும் காலம் என முதற்கண் காலம் சுட்டப்படுகிறது.

மதி நிறைந்த :

இங்கு கண்ணனுடன் கலத்தலாலாகிற அனுபவம் கிட்டப்போகின்றதாகையாலே 'மதி நிறைந்த' நாளைக் கொண்டாடுகிறுர்கள். பிரிந்தவர்கட்கே மதி சுடுந்தன்மையது. இங்கு சேரப்போகிறுர்கள். ஆகையால் மதியைப் போற்றுகின்றனர். இனி 'மதி' என்பதற்கு 'ஞானம்' எனப் பொருள் கொண்டு 'ஞானம் பூர்ணமான நாள்' என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். இறைவனிடத்து இச்சை பிறத்தலும் ஞானமேயாதலின் இங்ஙனம் சொல்லப்பெற்றது.

நன்னுளால் :

கண்ணனுடன் இணையப்போகும் நாளாதலின் 'நன்னுள்' ஆயிற்று. முன்பு அவ்வாறின்மையின் அவை தீயன.

நீராட :

நீராடுதல் என இங்குக் குறிக்கப் பெறுவது ஒரு குறியீட்டு வழக்கு (symbolic usage). கலவியைப் பண்டைச் சங்க நூல்களில் 'சுனையாடல்' எனக் குறியிட்டு வழங்கல் மரபு. கண்ணனுடனுன கலவியினை (பரமாத்மா—ஜீவாத்மாவின் ஐக்கியம்) 'நீராடல்' எனக் குறிக்கின்றனர். இறைவனைத் தடாகமாக உருவகிக்கும் மரபினை நம்மாழ்வாரின் பாசுரங்களில் "தயரதன் பெற்ற மரகத மணித்தடம்" என்னுமிடத்திலும் "வாசத்தடம்போல் வருவானே". என்னுமிடத்திலும் காண்கிறேம். திருமங்கையாழ்வாரும் "பொற்றுமரைக் கயம் நீராடப் போனுன்" என இக்குறியீட்டு வழக்கினைப் பாடியருளியுள்ளனர். இவ்வகைத் தொடர்பே ஓர் ஆதமா அடைய வேண்டிய பயன்.

**போதுவீர் போதுமினோ :**

இறைவனிடத்து இச்சையே போதுமானது. எனவே விருப்பமுடையவர்கள் இந் நெறிக்கு வரலாம் என்பது கருத்து. ஆண்டாளின் தகப்பனராகிய வில்லிபுத்தூர் விட்டுச் சித்தன் என்னும் பெரியாழ்வாரும் "கூடும் மனம் உடையீர்........கூடுமினோ" எனப் பாடியதனை அடியொற்றியே இங்கு இத்தொடர் அமைந்துள்ளது. தாய் தந்தையருக்குப் பணிவிடைச் செய்ய இச்சை அன்பு தவிர வேறெது வேண்டும்? அதுபோலத் தாயாயும் தந்தையாயும் விளங்கும் இறைவனுக்குத் தொண்டு செய்ய இவ்வன்பே வேண்டுவது. இவ்வாறே அன்புக் கொள்கையும் ஒரு சிறந்த பயன்.

**நேரிழையீர் :**

நேரிதான அணி அணிந்தோரே என்பது நேர் பொருள். இங்கு 'அணி' என்பதற்கு 'அவனே உபாயம்' என்ற நினைவையே அணியாகக் கொண்டவர் என்பது உள்ளுறைப் பொருள்.

**சீர்மல்கும் ஆய்ப்பாடி :**

பாவைக்களம் அடையும் இடம் இதுவே. பாலும் வெண்ணெயும் மலிந்த ஊர். இங்குக் களம் எனச் சுட்டியது அடியார்களிடம் சேரும் இடம். தனித்தன்றி எல்லாரும் கூடி அனுபவிக்கும் இடம். கண்ணன் விரும்பி அவதரித்த இடம். எல்லோருக்கும் எளி வந்த தன்மையனாய் (சௌலப்யனாய்) வந்த இடம். பரமபதம்போல வேறொரு வடிவு கொண்டு செல்ல வேண்டாது இருக்கின்ற உடலோடே அவனை அனுபவிக்கத்தக்க ஊர்.

**செல்வச் சிறுமீர்காள் :**

செல்வம் நிறைந்த சிறுமியரே என்பது நேர்பொருள். ஆத்மாவுக்கு நிலைபேறுடையதான செல்வமாகிய இறைத்தொடர்பு (பகவத்ஸம்பந்தம்) என்பது உள்ளுறைப் பொருள். இறைவனால் உகக்கப்பெறும் பருவமுடைய (ஆத்ம நிலை) கன்னியர், தன்னையே உபாயமாகப் பற்றியவர்கள் ஆகையாலே அவர்களை உகந்து அருள்பாலிக்கின்றான் என்பது கருத்து. ஆக இது வரை அடைய வேண்டிய பயன் சுட்டப்பட்டது.

**(ஆ) ப்ராபகம் (உபாயம்)**

இனி உபாயம் எங்ஙனம் உணர்த்தப்படுகிறது என்பதைக் காண்போம்.

**கூர்வேற் கொடுந்தொழிலன் நந்த கோபன் குமரன் :**

கண்ணினை இமை காப்பதுபோல் கண்ணனைக் காத்து வருபவர் ஆகையால் 'கூர்வேற் கொடிந்தொழிலன்' எனப்பாடுகிறார் நந்தகோபரை. இந் நந்தகோபருடைய குமரன் அழகு மகன் கண்ணனும் இறைவன்.

**ஏரார்ந்த கன்னி யசோதை இளஞ் சிங்கம் :**

நந்தகோபருக்குக் குமரனானவன் யசோதைக்கு இளஞ்சிங்கம் ஆகிறான். கன்னியருக்கும் குமரனும் இளஞ் சிங்கமுமாய் இருத்தல் பொருத்தமே. 'உபாயம் சொல்ல வந்த ஆண்டாள் இங்கு தாய் தந்தையராகிய இவ்விருவரையும் சுட்டுவது ஒரு காரணம் பற்றியேயாகும். இறைவனைப் பற்றுமவர் புருஷகாரத்தை முன்னிட்டே பற்ற வேண்டுமாகையால் இதற்குக் காரணமான நந்தகோபரையும் யசோதையையும் வாழ்த்துகின்றனர். உள்ளுறைப் பொருள் நிலையில் நந்தகோபர் ஆசாரியரையும் (குரு) யசோதை திருமந்திரத்தையும் (ஓம் நமோ நாராயணாய) குறிக்க வழங்குவர். ஆசாரியன் மூலமாய் மந்திரப் பொருளறிந்து இறையை அடைய வேண்டும் என்பது கருத்து.

**கார்மேனிச் செங்கண் கார்மதியம் போல் முகத்தான் :**

நேர் பொருள் நிலையில் கருத்த மேனியும் சிவந்த கண்களையும் சூரிய ஒளியுடனகூடிய சந்திரனைப்போன்ற திருமுகம் உடையவன் என்றுரைக் காலம். உள்ளுறை நிலையில் இத் தொடரால் இறைவனின் பல்வேறு குணங்கள் குறிப்பாக உணர்த்தப்படுகின்றன. 'உபாயம் சொல்ல வேண்டிய இடத்தே இக் குணங்களை ஏன் கூறவேண்டும்' என்ற கேள்வி எழலாம். உபாயமாகிய அவனைப் பற்றுவதற்கு இக் குணங்களே காரணங்களாக அமைவதால் இங்குச் சுட்டப்படுகின்றன எனக் கொள்ள வேண்டும். இத் தொடர் சுட்டும் குணங்களாவன வாத்ஸல்யம் (குற்றங்களைப் போக்யமாகக் கொள்ளல் - பசு கன்றின் அழுக்கையே விரும்பி உட்கொள்வதுபோல), ஸ்வாமித்வம் (எல்லா உயிர்களையும் உடையவனாயிருக்கை (சௌசீலயம் உயர்வு தாழ்வின்றி எல்லோருடனும் ஒக்கப் பரிமாறுகை) சௌலப்யம் (எளிமை), ஸர்வஜ்ஞத்வம் (அனைத்தையும் ஒரே சமயத்தில் அறிகை), ஸர்வஸகித்வம் (யாராலும் செய்ய முடியாதவற்றை எளிதில் செய்பவனாயிருக்கை), அவாப்தஸமஸ்தகாமத்வம் (எல்லாவற்றாலும் முழுமையுடையவனாயிருக்கை), ஸர்வஸ்வாமித்வம்—(அடியவர் காரியத்தைத் தன்னுடையதாக நினைக்கும்படியாக இவர்களை உடையவனாயிருக்கை), இரக்கம் (பிறர் துன்பம் கண்டு பொறுக்காமலிருத்தல்). 'செங்கண்' என்பதால் வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் குமரன் முதலியவற்றால் ஸௌலப்யமும், ஸௌசீல்யமும், 'இளஞ்சிங்கம்' கதிர்......முகத்தான்' என்பவற்றால் ஸர்வஸக்திதவமும் 'கார்மேனி' என்பதால் (பயன் கருதாது பெய்யும் மழைபோலிருத்தலின்) அவாப்தஸமஸ்தகாமத்வமும் உணர்த்தப்பட்டன.

**நாராயணனே நமக்கே பறை தருவான் :**

நாராயணனே என்னும் சொல்லால் அவன் ஒருவனே 'உபாயம்'

(29-ம் பக்கம் பார்க்க)



# கவிஞர் போதனா

திரு. கே. இராமந்ாதன், பி.ஏ.,
சேலம்-6

இன்று உலகில் விளங்கும் மதங்களில் பழம்பெருமை வாய்ந்ததும், கருத்துக் கருவூலமாகத் திகழ்கின்ற பெருமையினையும் உடையது நம் இந்து மதம். உயர்ந்த கருத்துக்களையும், உன்னதத் தத்துவங்களையும் இந்து மதம் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. காலத்தின் தேவைக்கேற்ப அவ்வப்போது நற்கவி இயற்ற வல்ல கவிஞர்கள் தோன்றி இறைவனின் புகழைப் பாடித் தாம் மகிழ்வுற்றதுடன் இவ்வுலகில் பக்தி வெள்ளத்தின் வேகத்தையும் முடுக்கிவிட்டனர். இந்து மதம் பலமொழி பேசும் மக்களை தன்னகத்தே கொண்டு விளங்குவதும், 'முப்பது கோடி முகமுடையாள் உயிர் மொய்ம்புற ஒன்றுடையாள்' என்று மகாகவி பாரதியாரின் கூற்றைப் போல் இறைவனல்லால் இவ்வையகம் இல்லை எனும் கருத்தில் ஒன்றுபட்டு நிற்பதைக் காண்கிறோம். உலகளந்த திருமாலின் பேர் பாடி பக்திப் பரவசத்தில் மூழ்கிய கவிஞர்கள் பலர். பல மொழிகளைச் சார்ந்த கவிஞர்கள் தங்கள் தங்கள் தாய்மொழியில் மனமுருகும் பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். அவ்வாறு சுந்தரத் தெலுங்கு மொழியில் இறைவனும் திருமாலைப்பாடிப் புகழ் மாலைகளைச் சூட்டி மகிழ்ந்த கவிஞர்களில் தலை சிறந்தவர் கவிஞர் போதனா.

உள்ளீடற்ற எளிய வேய்ங்குழலில் ஒரு புறம் காற்றுப் புகுந்து மறுபுறம் வெளிவரும்போது அக்காற்று இனிய இசையாய் மாறி வருகின்றது. அது போல ஏழ்மையிலேயே பிறந்து, ஏழ்மையிலேயே வளர்ந்த கவிஞர் போதனாவின் உள்ளத்திலே பக்தி எனும் காற்றுப் புக அதனால் வெளிப்பட்ட தெய்வ பக்திப் பாடல்கள்தான் எத்தனை! எத்தனை!

நெடுங்காலம் இருளில் மூழ்கிக் கிடந்து தவிக்கும் உலகிற்கு, பகலவனின் ஒளி கிடைப்பின் மக்கள் எவ்வளவு மகிழ்ச்சியடைவர். பல்லாண்டு காலம் மக்களை பக்திப் பாதையில் நெறிப்படுத்தி அழைத்துச் செல்லும் ஒரு தலைவனில்லாமல் தவித்தது தெலுங்கு இலக்கிய உலகம். அந்நிலையினை மாற்றிட, மக்களின் மனதில் பக்தி ஒளியினை ஊட்டிடத் தோன்றியவரே கவிஞர் போதனா. முன்னாளில் 'ஏக சிலா' எனும் பெயர் கொண்டு இன்று வாரங்கல் என அழைக்கப்படும் ஊருக்கு அருகே அமைந்துள்ள பம்மேரா எனும் எளிய கிராமத்தில் கவிஞர் போதனா ஓர்

ஏழை விவசாயியின் மகனாக அவதரித்தார். கல்வி கற்க வேண்டும் என்னும் ஆவலினால் உந்தப் பெற்ற போதனா தமது கிராமத்தில் வாழ்ந்து வந்த ஒரு பண்டிதரிடம் கல்வி கற்றார்.

தமது கூரிய மதியினால் விரைவில் கல்வி கேள்விகளில் நன்கு கற்றுத் தேறிய கவிஞர் போதனா பாலகனாய் இருந்த போதே கவிதைகள் இயற்றும் ஆற்றல் வாய்க்கப் பெற்றவராயிருந்தார். இறைவனின் திருவுள்ளப்படி கவிஞர் போதனா சித்தானந்தர் எனும் பெரும் மகானை தரிசிக்க நேர்ந்தது. அவரது தரிசனம் கவிஞரின் வாழ்வில் பெரும் திருப்பு முனையாய் அமைந்தது. அம்மகான் இராம நாமத்தின் சிறப்பையும், அதைப் பாடிப் பரவ வேண்டியதன் அவசியத்தையும் எடுத்துரைத்துப் போதனாவின் மனத்திலே திருமாலின் பெருமையைப் பதியச் செய்தார். அம்மகானின் அருளுரைகளைப் பொன்னுரையாய் ஏற்ற கவிஞர் அன்று முதல் மானுடத் தெய்வமாம் இராமனின் பால் ஆழ்ந்த பக்தி கொண்டவராய் விளங்கினார்.

கவிஞர் போதனா தமது தாய்மொழியாம் தெலுங்கு மொழியில் 'பாகவதம்' எனும் உயர்ந்த நூலை எழுதி அழியாப் புகழினைப் பெற்றார். எளிய நடையிலும், இனிய மொழியிலும் எழுதப் பெற்ற இந்நூலில் கருநீல வண்ணன் கண்ணனின் கதைகள் அழகுபட வழங்கப்பட்டுள்ளன. இன்று தெலுங்கு மொழியில் உயர்ந்த நூலாக இலக்கிய உலகம் மதிக்கும் நூல் இவரது பாகவதமேயாகும். வைணவ பக்தி உலகின் சிறந்த தலைவர் வல்லபாச்சார்யார். இவர் போதனாவைவிட முப்பது ஆண்டுகள் இளையவர். இவரால் உரைக்கப்பட்ட பல உயர்ந்த தத்துவங்கள் முப்ப நாண்டுகட்கு முன்பே வாழ்ந்த போதனாவினால் அவரின் பாகவதத்தில் உரைக்கப்பட்டுள்ளன. அவற்றை நோக்குமபோது வல்லபாச்சார்யருக்கும் போதனாவின் நூல்களுக்கும் இடையே இருந்த தொடர்பினை தெளிவாக அறியலாம்.

பெருங்கவிஞராக விளங்கிய போதிலும் போதனா தம் முன்னோர் தொழிலான உழவுத் தொழிலையே செய்து வந்தார். வள்ளுவப் பெருந்தகையின் கருத்துக்கு ஏற்ப,

"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை."

என்னும் உயர்ந்த கொள்கையைத் தன் வாழ்வில் கடைப்பிடித்தார். செல்வத்தைச் சேர்க்க வேண்டும் எனும் எண்ணம் இவரது உள்ளத்தில் என்றும் உதித்ததே இல்லை. இவர் இளமைப் பருவத்திலேயே வீரபத்திர விஜயம், போகினி தண்டகம், நாராயண சதகம் எனும் நூல்களை இயற்றினார். ஏழ்மை வயப்பட்டு வாடிய போதும் இறைவனை பாடிப்பரவ ஒரு நாளும் இவரின் உள்ளம் மறந்ததில்லை. கவிஞர் போதனாவின் கவிதை இயற்றும் ஆற்றலை அறிந்த அவ்வூர் மன்னன் பெரும் பரிசுகள் பலவற்றை அனுப்பி அவைகளை ஏற்றுக்கொண்டு தன்னைப் புகழ்ந்து பாட வேண்டும் என்று வேண்டினான்.

மன்னவனின் பரிசுகளை ஏற்க மறுத்த கவிஞர் போதனா 'இறைவனைப் பாடும் என் நா ஒருபோதும் உன்னைப் புகழ்ந்து பாடாது. நான் எனது கவிதைகளை ஒருபோதும் விற்க மாட்டேன்' என்று பதிலுரைத்தார். கவிஞரின் பதிலால் சினமுற்ற மன்னன் பல துன்பங்களை அவருக்கு விளைவித்தான். திருமால் அருளால் அவர் அவற்றைத் தாங்கிக் கொண்டார்.

இவ்வாறு தனக்கு நா படைக்கப்பட்டது இறைவனைப் புகழ்ந்தேத்துவதற்கே எனக்கொண்டு வாழ்ந்த கவிஞர் போதனா தெலுங்கு இலக்கிய வானில் என்றும் ஒளிபரப்பி நிற்கும் பகலவனாய் நிற்கின்றார்.

✻

# ஸ்ரீபிரசன்ன வேங்கடேஸ்வர சுவாமி கோயில்



ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரர் மூலவர்.

"நலியும் நரகமும் நைந்த நமக்கு
இங்கு யாதொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டு கொண்மின்
கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்"

எனும் நம்மாழ்வார் கூற்றுக்கொப்ப, நாளும் பிரச்சனைகளால் சூழப்பட்டிருக்கும் மனிதர்களின் அமைதிக்கு இறுதிப் புகலிடமாக அமைவன அப்பரம்பொருளின் அர்ச்சாவதாரப் பெருமையினைப் பேசி, இருந்தும், கிடந்தும், நின்றும் அருள் சுரக்கும் அவன் உறையும் பெருங்கோயில்களேயாம். இவ்வகையில் மங்கை கொண்டவனின் 108 திருப்பதிகளும், கங்கை கொண்டவனின் 1008 திருத்தலங்களும் தவிர மொழி, இன, இட, வேறுபாடின்றி நாடெங்கும், அப்பரம்பொருளின் அருமை கூறிடும் புராணச் சிறப்பும், வரலாற்றுப் பெருமையும் கொண்டு அருளாளர்கள் போற்றிடும் திருக்கோயில்கள் எண்ணிலடங்கா பல அமைந்துள்ளன. இவற்றில் பலகோயில்களின் சிறப்பும் பெருமையும் எல்லோரும் அறிந்து இன்புற்றிருக்கவாய்ப்பில்லை. இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் தன் மேலாண்மையின் கீழ் அண்மையில் பொறுப்பேற்றுக்கொண்டது திருப்பதிக்கருகே 16 கி. மீ. தொலைவில் அப்ளாய குண்ட்டா எனும் கிராமத்தில் உள்ள, தனக்கே உரிய தனித்தன்மையுடன் விளங்கும் ஸ்ரீபிரசன்ன வேங்டேஸ்வர சுவாமி திருக்கோயிலாகும்.

'சௌலப்யத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்' எனும் முமுட்சுப்படி உரைக்கொப்ப அவ்வலர்மேல் மங்கை உறையும் மார்பன், தன் சௌலப்ய குணங்களின் பெருமையைப் பாருக்குத் தெரிவிக்க, சரணாகதி தத்துவத்தின் சிறப்பினை எல்லோரும் அறிய தன்னிலை இழிந்து, இம்மண்மீது பல இடங்களில் பல நிலைகளில் எழுந்தருளியுள்ளான். இவ்வகையில், மேற்கூறிய திருத்தலத்தில் பாகவதர் பெருமையைப் பறைச்சாற்றும் வகையில் ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரராக அருள் பாலித்து வருகின்றான். சுற்றும் பட்டுமெத்தை விரித்தாற்போல் பசுமை நெல் வயல்கள் விளங்க, கொண்டல் காற்று உண்மையான கிராமத்தின் நறுமணத்தை எங்கும் வீசிட குன்றுகளில் நடுவில், பக்கத்தே தாமரைக்குளம் அமைய இக்கோயில் அமைந்துள்ளது. திருமால் கலியுகத்தில் ஸ்ரீ பத்மாவதித் தாயாரை மணந்து ஸ்ரீநிவாசனாக வேங்கடமலையினைத் தன் இருப்பிடமாகக் கொள்ளுமுன் தன் துணைவியுடன் இத்தலத்தில் சில நாள் தங்கியிருந்ததாக புராணம் செப்பும். இத்தலத்துள்ள மலைகளில் பல முனிவர்கள் தவம் செய்து வந்ததாகவும், அவர்களுள் சித்தய்யா எனும் யோகிக்கு, அவர் விரும்பியவாறு, ஸ்ரீநிவாசன் தன் தரிசனத்தைத் தந்ததாகவும், அக்காட்சியின் திருவுருவமே ஸ்ரீபிரசன்ன வேங்கடேஸ்வர சுவாமியாக இக்கோயிலின் மூலவர் அழைக்கப்படுகின்றார். பல யோகிகள் தவம் செய்து வந்ததால் இத்தலத்தை ஒட்டி உள்ள மலை 'யோகி மல கொண்டா' (முனிவர்கள் மலை) என்று ஒரு காலத்தில் அழைக்கப்பட்டு, அதுவே தற்போது வேமுல கொண்டா என்று மருவி வழங்கப்படுகிறது. இத்தலத்திற்கு 'அப்ளாய குண்ட்டா'

எனும் பெயர் வந்தமைக்கும் ஒரு கதை கூறப்படுகிறது. அப்ளய்யா எனும் ஒரு யாத்திரிகர், திருமலைக்குச் செல்லும் வழியில் இவ்வூரில் ஒரு மரத்தடியில் படுத்துறங்கி விட்டு செல்லுகையில், வழியில் தான் கொண்டு வந்த பணப்பையினை அம் மரத்தடியிலேயே வைத்துவிட்டு வந்ததை நினைவிற்கொண்டு மீண்டும் அம்மரத்தடிக்குத் திரும்பினார் இதற்குள் அப்பணப்பை ...ஞ்சானைத் தால் மூடப்பட்டிருந்தது. பிறகு எப்படியோ அதனைக் கண்டெடுத்த அவர், அவ்வாறு அப்பணப்பை அங்கு தவறவிட்டது ஒரு தெய்வச் செயல தானோ என்று எண்ணி, அத்தொகை கொண்டு, அவ்வூர் மக்கள் பயனுறும் வகையில் ஏரி ஒன்றினை வெட்டிய தாகக் கூறப்படுகிறது. பிறகு அவ் ஏரி அவர் பெயரிலேயே 'அப்ளய்யா ஏரி' என்றழைக்கப்பட்டு பின்னர் ஏரி வற்றி, குளம் ஆனபிறகு, அது அப்ளாய குண்ட்டா எனப்பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. மேலும் கடன் வைக்காது, அப்போதைக்கப் போதே கூலிப்பணம் கொடுத்து இவ் ஏரிதோண்டப்பட்டதாகவும் அதனால் அது 'அப்புலேனி குண்ட்டா' (கடனில்லாத குளம்) என்று பெயர் பெற்றதாகவும் கூறப்படுகிறது. இதனை சற்றே உறுதி செய்யும் வண்ணம் 'அன்ருணசரோவரம்' என்ற இத்தலத்தின் பெயர் அக்கோயிலினுள் உள்ள பித்தளை விளக்குகளில் பொறிக்கப்பட்டும், இத்தலத்தினைப் போற்றிடும் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது.



ஸ்ரீதேவி, பூதேவி சமேத உத்சவர்

சரித்திர சான்றுகளின்படி, இத்தலம் உள்ளிட்டு திருமலை, திருச்சானூர், நாராயணவனம், காளஹஸ்தி, திருத்தணி போன்ற பல முக்கியத்தலங்கள் அடங்கியஅதாவது ஆற்காடு, செங்கற்பட்டு, காளஹஸ்தி போன்ற நகரங்களின் எல்லைகுட்பட்டு விளங்கும் 900 கிராமங்கள் கார்வேட்டு நகர் ஜமீந்தார்களின் நேரடி அரசாட்சிக்கு உட்பட்டு இருந்தன. இவர்கள் வம்சத்தார் திருமலைக் கோயிலுக்கு ஓர் இரத்தினக் கிரீடமும் தங்கக்கந்தி (நந்தக கட்கம் ஒன்றும்) தந்ததாகச் சில கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து தெரிய வருகின்றது. இவ்வம்சத்தைச் சார்ந்த கடாரி சாருவ மாக ராஜு ஸ்ரீ வேங்கட பெருமாள் ராஜு என்பவர் இவ் அப்ளாய குண்ட்டா ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசுவரசுவாமி கோயிலுக்கெனப் பல நிலங்களை மான்யமாகக்கொடுத்ததாகச் சரித்திரக் குறிப்புகள் கூறுகின்றன. சுமார் கி. பி. 1750-ஆம் ஆண்டில் வாழ்ந்ததாகக் கூறப்படும் இம்மன்னவன் அளித்த பித்தளைக் குத்து விளக்குகள் இரண்டினை இன்றும் இக்கோயில் வளாகத்தில் காணலாம். சுமார் 30 கி. கி. எடையுடன் 5 அடி உயரமுள்ள இக்குத்து விளக்கு



கோயிலின் உட்தோற்றம்



கருட மண்டபமும், கொடிமரமும்

அப்பளாய குண்டா எனும் இத் தலத்திற்குக்கொண்டுவரப்பட்டதோ என்பதும், இல்லையெனின் இரண்டு இடங்களிலும் ஸ்ரீ பிரசன்ன வேங்க டேஸ்வர சுவாமி கோயில்கள் இரண்டு இருந்தனவா என்பதும் ஆராய்ச்சிக் குரியது. கி. பி. 15ஆம் நூற்றாண் டில் வாழ்ந்த ஸ்ரீ அன்னமாசார்யா எனும் தெலுங்குப் பக்தி கவிஞரின் பேரனை சின்ன திருமலாச்சார்யா தன் பாக்களில் ஸ்ரீ பிரசன்ன வேங்க டேஸ்வர சுவாமி பற்றிக் குறிப்பிட் டுள்ளார் எனினும், திருத்தலத்தின் பெயர் காணப்படவில்லை.

ஆங்கிலேயர் ஆட்சியின் போதும், இக்கோயில்களின் நிருவாகம் கார் வேட்டு நகர் ஜமீந்தார் வம்சத்தாரி டம் இருந்தது. பிறகு சென்னை மகாண

களின் அடிப்பகுதியில் தெலுங்கில் சில குறிப்புகள் பொறிக்கப்பட்டுள் ளன 'ஸ்ரீ அட்சய க்ஷம்வட்சர வைகாஸ சுத்த பௌர்ணமி ல அன்ருண ஸரோவர நகராதீஸ்வர ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வர சுவாமி சன்னிதௌ, ஸ்ரீமகா மண்டலேஸ்வர கடாரி சாளுவ மாகராஜ ஸ்ரீவேங்கட பெருமாள் ராஜு தேவ மகா ராஜு சமர்ப்பிதா அகண்ட தீபகா ஸ்தம்பௌ விஜயதே துராய்' என்று கூறும் இவ்வரிகள் மேற்கூறிய செய்தி களைக் கூறி நிற்கின்றன. திருமலை யாவின் தீவிர பக்தனுகவும், புலவர் பெருமக்களை ஆதரித்து வநத சிறந்த அறிஞனுகவும் இம்மன்னை திகழ்ந்த தாகத் தெரிய வருகின்றது. இவன் தம் சபையில் விஜயநகர அரசர்களைப் போன்றே, 'அஷ்டதிக் கஜம்' எனும் கவிக்குழுவை ஆதரித்து வநதுள்ளான் இக்குழுவைச் சார்நத புலவர்களில் சாரங்கபாணி மற்றும் ரிகவேத வெங் கடாசலபதி எனும் கவிஞர்கள் இயற் றியத் தெலுங்குப்பாடல்களில் சிலவற் றில் ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வர சுவாமி புகழ் பேசப் பெற்றுள்ளது. ஆனல் பாடலில் கார்வேட்டு நகர் குறிப்பிருப்பதால், ஒரு காலத்து அங் கிருந்த ஸ்ரீ பிரசன்ன வேங்கட சுவாமி



வருடாந்திர பிரம்மோத்சவத்தின்போது உத்சவரின் திருவீதி உலா



ஸ்ரீ பத்மாவதி தாயார் சன்னதி

ஆட்சியின்போது திருத்தணி தேவஸ்தானத்தின் நிருவாகத்தின்கீழ் வந்தது. பிறகு மாநிலப் பிரிவுகளுக்குப் பிறகு ஆந்திர மாநில அறநிலையத் துறையின்கீழ் திரு. ஐயப்ப ரெட்டி வம்சத்தார் தர்ம கர்த்தாவாக விளங்க உள்ளூர் ஆலோசனைக் குழுவின் பொறுப்பில் இக்கோயில் இருந்து வந்தது. 23-9-88 அன்று திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின்கீழ் ஏற்கப்பட்டுள்ளது.

கிழக்கு நோக்கியுள்ள இக்கோயிலைச் சுற்றிச் செங்கற்களால் கட்டப்பட்ட பிராகாரம் ஒன்று உள்ளது. நுழை வாயிலில் உள்ள ராஜகோபுரம் அடித்தளம் மட்டுமே கொண்டுள்ளது. நுழை வாசலை அடுத்து துவஜஸ்தம்பம் ஒன்றும், கருடாழ்வார் மண்டபம் ஒன்றும் உள்ளன. கருவறையைச் சுற்றி முடிவு பெறாத 2 அடி உயரமுள்ள உட்பிராகாரம் ஒன்றும் உள்ளது. கருவறை மண்டபத்தின் இரு பக்கங்களிலும் உள் மூலைகளில் ஸ்ரீபத்மாவதி மற்றும் ஸ்ரீ ஆண்டாள் திருச்சன்னதிகள் உள்ளன. ஸ்ரீபத்மாவதி தாயாரின் திருவுருவம், திருச்சானூர் கோயில் அம்மையாரைவிட பெரியது. முக மண்டபம் 16 தூண்களைக் கொண்டு விளங்க, உள்ளே இராமானுஜர் உள்ளிட்ட ஒன்பது ஆழ்வார்களின் சிறு உருவத் திருமேனிகள் கற்சிலைகளில் செதுக்கப்பட்டுள்ளன. கோயில் விழாவுக்கென்று ஒரு காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த சில வாகனங்கள், வண்ணம் மறைந்து விளங்குகின்றன. அங்குள்ள யாளச் சப்பரம் ஒன்று விழாக்களின்போது திருத்தேராகபயன்படுத்தப்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. சில ஆண்டுகள் முன்பு வரை பெரிய அளவில் கோயில் விழாக்கள் கொண்டாடப்பட்டதாக உள்ளூர் மக்கள் கூறினர். மூலவர் அபய ஹஸ்தத்துடன் திருக்கரங்களுடன் விளங்குகின்றார். திருஇருக்கும் மூலவரின் மார்பில் முக்கோண வடிவில் ஒரு சின்னம் மட்டுமே உள்ளது. வைகானஸ முறைப்படி சமயச்



கோயிலிலுள்ள இரண்டு பித்தளைக் குத்து விளக்குகள்

சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரரின் உத்சவ மூர்த்திகள் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவருகின்றன. இவர்களைத் தவிர இராமானுஜர், சக்ரத்தாழ்வார், விஷ்வக்சேனர் ஆகியோரது செப்புத் திருவுருவச் சிலைகளும் உள்ளன. சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீ தேவி, சக்ரத்தாழ்வார் ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரர், ஸ்ரீ யோக ஸ்ரீ நிவாசன் ஆகியோரது ஐம்பொன் சிலைகள் களவு போயின. உள்ளூர் மற்றும் அருகு உள்ள கிராமத்து உதவியுடன் மறுபடியும் மேற்படி சிலைகள் செய்து வைக்கப்பட்டுள்ளன. கோயிலின் உட்பகுதியில் மடப்பள்ளி ஒன்றும், யாக சாலை ஒன்றும் கூரை-இடிந்த கட்டிடத்தில் உள்ளன. மடப்பள்ளியில் உள்ள, ஒரு பெண் தெய்வ கற்சிலையினை 'அன்ன பூர்ணாதேவி' என்று உள்ளூர் மக்கள் அழைத்து வழிபடுகின்றனர். ஆனால் அச்சிலை திருமலை மடப்பள்ளியில் உள்ள 'வகுள மாலிகை' போன்றதே என்று துணியலாம்.

கோயிலுக்கு வெளியே, சுமார் 300 அடி தூரத்தில் ஸ்ரீபிரசன்ன ஆஞ்சநேயர் கோயில் ஒன்று உள்ளது. ஞாயிற்றுக் கிழமைகளில் உள்ளூர் மக்களின் உதவியுடன் பஞ்சாமிர்த அபிஷேகமும், பூலங்கி சேவையும் நடைபெற்று வருகின்றது. மே-ஜூன் மாத காலங்களில் வருடாந்திர பிரம்மோத்சவம் நடைபெற்று வருகின்றது. இறுதி நாளன்று சக்ரஸ்நானம் அருகு உள்ள அப்பாயி குண்ட்டா எனும் திருக்குளத்தில் நடைபெறுகின்றது.

இவ்வாறு புராணச் சிறப்பும், சரித்திரப் பின்னணியும் கொண்டு மாலவனின் பெருமை பேசும் இத்தலத்திற்கு வந்து இப்பெருமானை வழிபட்டு நம் ஆன்மீகத்தாகத்தினைத் தீர்த்துக் கொள்வோமாக!

*

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6 | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களைக் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ்மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர் பக்தர்களுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அறிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

### முதல் தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய கட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல் கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள், 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத் தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

### ராம பகீச்சா விருந்தினர் விடுதிகள் :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டு விட்டன. 44. 5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

### ஸப்தகிரி சத்திரங்கள் :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 9 ‧ 3 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 12'×14' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

### 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்பளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது, விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/ அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனத்தின் அல்லது அறக்கட்டளையைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடத்தில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளித்த தங்கு வசதிகளில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு :

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517501. **எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.**

**தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:**

(20-ஆம் பக்கத் தொடர்ச்சி)

என்ற கருத்துச் சுட்டப்படுகிறது. அடியார்க்குப் பயனும் உபாயமாயும் இருப்பவன் நாராயணனே. நாராயணனே என்பதில் வரும் ஏகாரம் அவன் ஒருவனே உபாயம் என்பதைச் சுட்டி நிற்கிறது. உடையவனே உடைமைப்பற்றிக் கவலை கொள்வான். எனவே நாராயணனே பறை தருவான்; அவனே வந்து அருள் செய்வான் என்ற கருத்து இங்குச் சுட்டப் பெறுகிறது. நாமாய் நம்மிச்சையாய்ச் செய்யலாகாது. அவன் தரக் கொள்ள வேண்டும் என்பது கருத்து. இவ்வாறு 'பயனும்' 'உபாயமும்' உணர்த்தப் பெறுகின்றன இம் முதற் பாசுரத்தில்.

பக்குவபட்ட ஆன்மாக்கள் குருவின் துணையால் ஞானப்பால்பெற்றுப் பருகினுல் என்றும் இன்பத்தில் திளைக்கலாம். அத்தகையவர்களது இதயகமலத்தில் இறைவன் பொறி வண்டுபோல் படுத்து உறங்குவான். இதை ஓர் அழகிய வருணனை மூலம் காட்டுகிறது திருப்பாவை.

"ஓங்கு பெரு செந்நெல் ஊடு கயலுகளப்
பூங்குவளைப்போதில் பொறி வண்டு கண்படுப்பத்
தேங்காத புக்கிருந்து சீர்த்த முலைப் பற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்!"

என்னும் பாடலில், கயல் மீன்கள் ஆன்மாக்களையும், குவளை மலர் இதயங்களையும், பொறிவண்டு இறைவனையும், பசுக்கள் குருவையும், பால் ஞானத்தையும் குறிக்கும் என்பர்.

குரு, பகவத் குணுனுபவ தத்துவத்தை உட்கொண்டு உயிர் பீடத்திலேறி அறிவற்றவர்களுக்கு ஞான மழை பொழிய வேண்டும் என்பதையே மழை வேண்டல் மூலம் இறைவனிடம் வேண்டுகிறது திருப்பாவை.

## எதுவும் நிலைப்பதில்லை

அனுதியான இந்த சம்சார வாழ்க்கையில் ஆயிரக்கணக்கான பிறவிகளில் ஆயிரக்கணக்கான தாய் தந்தையர்களும், பிள்ளைப் பெண்டிர்களும் சென்றுவிட்டனர். இப்பொழுது பலர் நம்முடன் கூடவே சென்று கொண்டிருக்கின்றனர். இனிவரும் பிறவிகளிலும் மற்றும் பலர் செல்லப் போகின்றனர். இந்த உலகில் எதுவும் நிலைப்பதில்லை.

—மகாபாரதம்.

## இறைவன் திருநாமம்

இறைவன் திருநாமத்தை திரும்பத் திரும்ப உச்சரியுங்கள். அதுவே உங்கள் இதய கமலத்தை மலர்விக்கும் கதிரவனுவதால், இடைவிடாமல் மூச்சைப் போன்று திருநாமம் தானுகவே இயங்கச் சாதனை புரியுங்கள்.

—பகவான் ஸ்ரீ சத்ய சாயிபாபா.

## பிரார்த்தனை

ஒருவன் பிரார்த்தனை செய்வதில் அவனுக்காக மட்டும் செய்வது முறையல்ல. இந்த உலகம் எல்லாம் நன்கு வாழும்படி பிரார்த்தனை செய்தல் வேண்டும். அப்படிச் செய்வதினுல் அதில் ஒருவனுக்கு வேண்டியவை அடங்கி விடுகின்றன.

—வள்ளலார்.

## வேதமும் தர்மமும்

வேதப்பொருளான பரமாத்மா தசரதனின் பிள்ளையாகப் பிறந்தவுடன், வேதமும் வால்மீகியின் குழந்தையாக, இராமாயணமாக வந்துவிட்டது. இராமாயணம் முழுக்க, முழுக்க எங்கே பார்த்தாலும் தர்மத்தைத் தான் சொல்லியிருக்கிறது.

—ஸ்ரீ காஞ்சி சங்கராச்சார்ய சுவாமிகள்.

## மனம்

கப்பல் எந்த திசையில் போய்க் கொண்டிருந்தாலும் அதிலுள்ள திசைகாட்டி முள் வட துருவத்தையே நோக்கி நிற்கிறது. அங்ஙனம் மனிதன் எதைச் செய்து கொண்டிருந்தாலும் அவனது மனம் யாண்டும் சர்வேஸ்வரனிடத்தே நிலைத்திருக்கட்டும்.

—பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

## பாவ புண்ணியத்தில் பங்கு

மனைவி செய்யும் புண்ணியத்தில் கணவனுக்குப்பங்கு கிடையாது. கணவன் செய்யும் புண்ணியத்தில் மனைவிக்கு பங்கு உண்டு. மனைவி செய்யும் பாவத்தில் கணவனுக்குப் பங்கு உண்டு. கணவன் செய்யும் பாவத்தில் மனைவிக்குப் பங்கு கிடையாது.

—திருமுருக கிருபானந்த வாரியார்.

அனுப்பியவர்: திரு வி. ஸ்ரீதர் - கோயமுத்தூர்.

'சத்துவ குணம் ஓங்கி, மெய்ஞ் ஞானம் பிறக்கும்போது அஞ்ஞானம் சிதறிப் பாய்ந்து போகிறது; அஞ் ஞானம் அகலும்போது இறைவன் நமக்கு அருள் புரிவன்' என்னும் கருத்தை 'கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு மேய்வான் பரந்தன காண்' என்று திருப்பாவை மொழி கிறது.

ஞான ஒளியில் மூழ்கி, இறையின் பத்தில் ஆழ்ந்திருப்பவர்களது அருள் பெற விரும்புவோர் அவரை ஞான உறக்கத்தினின்றும் எழுப்புவதைத் 'தூமணி மாடத்துச் சுற்றும் விளக் கெரிய தூபம் கமழும் துயலணைமேல் கண் வளரும்' ஒரு பெண்ணைக் காட்டி விளக்குகிறது திருப்பாவை.

'கனைத்து இளங்கற்று எருமைக் கன்றுக்கு இரங்கி நினைத்து முலே வழியே நின்று பால்' சொரிவது போலச் சான்றோர்கள் பிறர் கேட்கா மலேயே அவர்களுக்கு ஞானோபதேசம் செய்வர்.

இறைவன் கோயிலேக் காக்கும் அடி யார்களின் மனக்கதவு திறப்பின் இறைவனை எளிதில் காண இயலும். இங்குக் கன்னியர்கள் 'நந்தகோப னின் கோயில் காப்பானது உதவி யால் உள்ளே நுழைந்து நப்பின்னை யசோதை, பலதேவன் முதலி யோரது துணையால் கண்ணனைக் காணும் பேறு' பெறுகின்றனர்.

ஞானமாகிய பாலே நிரம்பவுடைய ஆசாரியன் மூலம் இறைவனை அடி யார்கள் அறிந்து கொள்வர் என் பதை,

''மாற்றாதே பால் சொரியும் வள்ளல்
பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தோன் மகனே அறி
வுறாய் ''

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

அறிதுயில் கொண்ட இறைவன் அடியார்களின் அபயக்குரல் கேட்டு விழித்து அவர்களேக் காக்க வருவான் என்பதை,

''மாரி மலே முழைஞ்சில் மன்னிக்
கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும்
பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமாப் போலே நீ பூவைப் பூ
வண்ணா உன்
கோயில் நின்று இங்ஙனே போந்
தருளி கோப்புடைய
சீரிய சிங்காசனத்து இருந்து யாம்
வந்த
காரியம் ஆராய்ந்து அருள் ''

என்னும் பாடல் குறிப்பாகச் சுட்டு கிறது.

''அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி
போற்றி
சென்று அங்கு தென்னிலங்கை
செற்றாய் திறல் போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்
போற்றி
கன்று குணிலாய் எறிந்தாய் கழல்
போற்றி
குன்று குடையாய் எடுத்தாய் குணம்
போற்றி ''

என்னும் பாடலில் முறையாக மாவலி, இராவணன், சகடன், வத்சன், சுபித் தன், இந்திரன் ஆகிய அறுவரைச் சுட்டி அவர்களின் வலிமையைக் கெடச் செய்ததன் மூலம், அகங் காரம், காமம், மோகம், பேராசை, மாத்சரியம், குரோதம் என்ற அறு வகைக் கெட்டகுணங்களையும்அழித்த இறைவனது மகிமையைக் காட்டி இவை அழிந்தால்தான் இறைவனது அருள் கிடைக்கும் என்று குறிப்பாகச் சொல்லப்படுகிறது.

முடிவுரை :

பாவைப் பாடல்களே வெறும் குழுப் பாடல்களாகக் கருதாமல், துயி லெழுந்து வரும் கன்னியர்களே இறை வன் பெருமையையும், அருளேயும் நன்குணர்ந்துவரும் நன் மக்களாக வும், நீர்த்துறையை இறைவன்அருள் நிலேயமாகவும், அதில்நீராடி இன்புறு வதைத் திருவருளில் தோய்ந்து இன் புறுவதாகவும் கூறுவர். ஞாயிற்றின் நல்லொளி கண்டு மகளிர் நீராடுவது போன்று இறைவனது அருளொளி தோன்றக் கண்டு நன் மக்கள் அதன் இன்பத்தில் மூழ்குவரென்றும், மக ளிர் தம்மைத் தலேவன் கையில் அகப் படுவது போல் உலக மக்கள் தம்மை இறையருட்கு உரிமை செய்கின்றனர் என்றும் கூறுவர். இவ்வாறு தத் துவப் பொருள்கள் நிறைந்து பாவைப் பாடல்கள் சிறந்து விளங்கு கின்றன. திருப்பாவைப் பாடல்களே நமது அனைத்து பிழைகளும் போய் இறைவனின் பாதகமலங்களில் சேர, வாயினல்பாடி மனத்தினல் சிந்தித்து, அனைவரும் படிப்போம், பாடுவோம், உணர்வோம்.



# வேதத்தின் ஹிருதயம்

திரு கே. நாகராஜன்,
திருக்குணம்.

வேதம் அறிவு நூல் எனப்படும். அருணகிரிநாதர் வேதம் அறியாதவர்களைத் தம் பாடலில் "வேத நூல் கல்லா மூடர்" என்பார். அந்த வேதம் நான்கு வகைப்படும். அவற்றுள் நான்காவது வேதம் அதர்வணம் எனப்படும். இது மற்றய மூன்று வேதங்களாகிய இருக்கு, எஜுர், சாமம் என்ற மூன்றின் திரட்டேயாகும். ஆதலின் இருக்கு, எஜுர், சாமம் என்ற மூன்று வேதங்களுமே சிறந்தவையாகும். அதனாலேயே வேதம் "த்ரயீ" என்று பேசப்படுகிறது.

வேதம் மூன்றினுள்ளும் இருக்குக்கும் சாமத்திற்கும் இடையில் உள்ள வேதம் யஜுர் வேதம். அது ஏழு காண்டங்களை உடையது. முன்னால் மூன்றும் பின்னால் மூன்றும் போக நடுவில் அமைந்துள்ளது "திருருத்திரம்" ஆகும். அது பதினொரு அனுவாகங்களை உடையது. இந்த ருத்திரத்தின் மத்தியில் பஞ்சாட்சரம் உள்ளது. இதையே "வேதத்தின் ஹிருதயம்" என்பர். திரு ருத்ரம் வேதத்தின் கண் எனப்படும். வேதத்தின் கண்ணாகிய ருத்திரத்தின் மத்தியில் பஞ்சாக்ஷரம் இருப்பதால் இதனைக் கண்மணி என்றும் கூறுவர். பஞ்சாக்ஷரத்தின் நடுவில் சிவமாகிய சிகாரம் அமைந்துள்ளது. ஆகவே பஞ்சாக்ஷரம் மிகவும் சிறப்புடையதாகும்

வேத இதயமான பஞ்சாக்ஷரத்தை ஒரு முறை உச்சரித்தால் ஒரு முறை வேதம் முழுவதையும் சொன்னதற்குச் சமம். உருத்திர மந்திரமான பஞ்சாக்ஷர ஜபம இகபர செளபாக்கியங்கள் அனைத்தையும் தரவல்லது. உருத்திர பஞ்சாக்ஷரத்தை ஜபித்துச் சிறப்புப் பெற்றவர் பசுபதி நாயனார் என்பவராவார். உருத்திர பஞ்சாக்ஷரத்தை அவர் ஜபித்து சிறப்புப் பெற்றதாலேயே அவர் "ருத்திர பசுபதி நாயனார்" எனப் பெயர் பெற்றார். அவர் அவதரித்தத் தலம் சோழவள நாட்டிலுள்ள திருத்தலையூர் ஆகும். அருளுடைமையும் பொருளுடைமையும் மிகுந்த அப்பதியிலே ஒப்பில்லாத வேத மோதும் வேதியர் பலர் வாழ்ந்தனர். அம் மறைக்குலம் புரிந்த மாதவத்தினால் அங்கு பசுபதி நாயனார் அவதரித்தார்.

இனிய பறவைகளும் வண்டுகளும் இருந்து இன்னொலி செய்யும் தாமரைப் பொய்கையில் கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டு இரு கரங்களையும் சிரத்திடைக்கூப்பி உருகிய சிந்தையுடனும், ஏகாக்ர சித்தத்துடனும் உருத்திர மந்திரத்தை ஜபித்துவரலானார். காலை முதல் உச்சி வரையிலும், மாலையிலும் மிகுந்த உறுதியுடன் நியதியாகப் பயின்று வர மறை புகழும் இறைவர் திருவுளம் உவந்து திருவருள் புரிய தவநெறி நின்ற உருத்திர பசுபதியார் சிவனடி சேர்ந்ததோடு 63 நாயன்மார்களிலே ஒருவராகத் திகழும் பேற்றை அடைந்தார். ஆதலால் ஐந்தெழுத்து மந்திரத்தின் பெருமையை அளவிட்டுக் கூறவும் கூடுமோ! மேலும் கீழ் வரும் பாடலாலும் வேத இதயமான ஐந்தெழுத்தின் அருமையைக் காண்போம்.

ஆவியீரைந்தை அபரத்தே வைத்
தோதில்
ஆவியீரைந்தை அகற்றலாம்—ஆவியீர்
ஐந்தரலாம் ஆவியீர் ஐந்துரலாம்
ஆவியீர்
ஐந்திடலாம் ஓரிரண்டோ டாய்ந்து

ந, ம, சி, வ, ய என்ற ஐந்தெழுத்தும் "நமசிவய" என்ற பஞ்சாக்ஷரமாகும். இதில் ந—என்பது திரோதமலம். ம—என்பது ஆணவ மலம். சி—என்பது சிவம். வ—என்பது திருவருள். ய—என்பது ஆன்மா. எனவே ஆன்ம எழுத்து "ய" ஆகும். ஈரைந்து பத்து ($5 \times 2 = 10$) ஆகும். தமிழ்க் கணக்கில் குறிப்பிடும்போது பத்து என்பது "ய" ஆகும். இந்த யகரத்தை அபரம்பின் வைத்து ஓத வேண்டும். அபரம் என்பது சிகரமும் வகரமும் அடங்கியதாகும். இந்த சிகரத்திற்கும் வகரத்திற்கும் பின்னே யகரத்தை வைத்து ஓதுவார்களானால் "ஆவியீர் ஐந்தை அகற்றலாம்" ஈரைந்து பத்து. இந்த பத்து என்ற சொல்லை ஆ, வி, என்ற இரண்டு எழுத்துக்களுக்கும் பின்னே சேர்க்க வேண்டும். ஆ என்ற எழுத்துக்குப் பின்னே பத்து என்ற பதம் சேர்க்க ஆபத்து (ஆ+பத்து=ஆபத்து என்றாயிற்று. வி என்ற எழுத்துக்குப்பின்னே பத்து என்ற பதம் சேர்க்க விபத்து (வி+பத்து=விபத்து) என்றாயிற்று. "ஆபத்து" இது உடலுக்கு வரும் துயர் ஆகும். அவை பசி, பிணி, மூப்பு ஆகும் "விபத்து" இது உயிருக்கு வரும் துயர் ஆகும். அவை பிறப்பு, இறப்பு, ஆகும். இந்த ஆபத்து, விபத்து என்ற இரண்டு துயரங்களும் சிகரமாகிய "சி"க்கும் வகரமாகிய "வ"க்கும் பின்னே யகரமாகிய "ய" வை சேர்த்து "சிவய" என்று சொல்பவர்களுக்கு இல்லை. "ஆவியீர் ஐந்துரலாம்" ஆணவம், கன்மம், மாயை, திரோதம், மாயேயம் என்ற பஞ்ச மலங்களும் அறும். "ஆவியீர் ஐந்துரலாம்" ஆவியீர்! விளி, உயிர், போன்றவர்களே! நிவிர்த்தி கலை, பிரதிஷ்டாகலை, வித்யாகலை, சாந்தி கலை, சாந்தியதீதக்கலை என்ற பஞ்ச கலா மயக்கமும் உண்டாகும். "ஆவியீர் ஐந்திடலாம் ஓரிரண்டோடாய்ந்து" ஆவி=பிராணவாயு. இது வீணாக வெளியே கழியாமல், ஈரைந்து பத்து அத்துடன் ஓரிரண்டு சேர்ந்தால் பன்னிரண்டு ($5 \times 2 = 10 + 2 = 12$) அங்குலம் உள்ளே நிலைத்து உள்ளொலியைப் பெருக்கி ஓஜஸ், தேஜஸ் என்ற இரண்டையும் தந்து, மனிதனை உயர்த்தி நன்மை செய்வதில் வேதத்தின் ஹிருதயமாகிய பஞ்சாக்ஷரத்திற்கு நிகர் பஞ்சாக்ஷரமே என்பதில் ஐயமில்லை.



## சிறுவர்ப் பகுதி

# முதலாழ்வார் மூவர் - ஓர் அறிமுகம்

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரும் திருமாலைப் பரம்பொருளாகக் கொண்டு, போற்றி வாழ்ந்தார்கள். பொய்கையார் காஞ்சிபுரம் திருவெஃகாவில் தாமரை மலரிடத்துத் தோன்றினர். பூதத்தார் கடன்மல்லை மாமல்லபுரம் மாதவிப்பூவில் அவதரித்தார். பேயார் மாடமாமயிலை ஆதிகேசவப் பெருமாள் திருக்கோயில் திருக்கிணற்றில் செவ்வல்லிமலரிடம் உதித்தார்.

இவர்கள் மூவரும் தாயின் கருவின் இடத்துத் தோன்றாமல், அயோநி சம்பந்தமுடையவராய் அவதரித்தார்கள் என்பர்.

இவர்கள் மூவர் காலம் கி. பி. ஆறும் நூற்றாண்டாகும். மற்றைய ஆழ்வார்கட்கு முன்னே அவதரித்தார்கள். ஓடித்திரியும் யோகிகளாய் எம்பெருமான் திருத்தலங்களைச் சேவித்து வந்தார்கள். ஒருவரையொருவர் அறியாமல் சென்று கொண்டிருந்தார்கள்.

இம்மூவரையும் ஒன்று சேர்த்து இவர்கள் வாயிலாகப் பிரபந்தத்தைத் தோற்றுவித்து உலகை உய்விக்க எண்ணினான் இறைவன். சீரேனுறு மறையாளர் நிறைந்த செல்வத் திருக்கோவலூரில் இரவில் இருளும், மழையும் கம்மிக் கொண்டு வரச் செய்தான் எம்பெருமான். அறிந்தார்கள்.

முதலில் பொய்கையாழ்வார் திருக்கோவிலூரில் ஒரு வைணவர் திருமாளிகையை அடைந்து கதவைத் தட்டினார். அம்மாளிகையின்கண் உள்ளவர் யாரென்று வினவினர்? யான், திருமால் அடியான் என்றார். என்ன வேண்டுமென்று கேட்டார். இரவில் இங்குப் படுப்பதற்கு இடங்கொடுங்கள் என்று கேட்டுக் கொண்டார்.

அவ்வைணவரும் தமது மாளிகையில் இடைக்கழியில் படுத்துக் கொள்ளச் சொன்னார். பொய்கையார், படுத்துக் கொண்டு தேவாதி தேவனை திருமாலைத் தியானம் செய்து கொண்டிருந்தார். பூதத்தார், அம்மாளிகையின் கதவைத் தட்டினார். யாரென்று வினவினர்? யான் நாராயணன் அடியான் என்றார். வருக இருவரும் இருக்கலாம் என்று பொய்கையார் அவர்க்கும் இடங்கொடுத்து அமர்ந்திருந்தார்கள். பின்னர் பேயார் சென்று அம்மாளிகைக் கதவைத் தட்டினார். யாரென வினவிய போது உலகளந்த உத்தமன் அடியான் என்று கூறினார். 'வாரும் ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்று அவரையும் வரவேற்று மூவரும் நின்று கொண்டிருந்தார்கள்.

இவர்கள் எம்பெருமான் குணங்களை பேசிக் கொண்டு அளவளாவி இருந்தார்கள். செந்தமிழ் பாடுவாராகிய இவர்கள் இடையே திருமகளோடு வந்து எம்பெருமானும் இடைக்கழியில் சேர்ந்து கொண்டார் இடத்தில் இறுக்கம் அதிகமாயிற்று. முன்பு இருந்ததைவிட இப்போது தம்மிடையே நெருக்கம் உண்டாகக் காரணம் என்ன என்று ஆராய்ந்தார்கள்.

தீந்தமிழில் சொல்மாலையால், மொழிவிளக்கேற்றினர் பொய்கையார்.

ஞானத்தமிழால் ஞானச் சுடர் விளக்கேற்றினர் பூதத்தார்.

பேயார், 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன். திகழும் அருக்கன் அணி நிறமும் கண்டேன். செருக்கிளரும் பொன்னாழி கண்டேன். புரிசங்கம் கைக்கொண்டேன், என்னாழி வண்ணன்பால் இன்று'. என்று முதன் முதலாக சீவன்மாக்களை உய்விக்க வேண்டுமென்று அருள் செய்யத் தூண்டும் திருமகளைக் கண்டேன் என்றார். பின்பு எம்பெருமானது அழகிய திருமேனியைக் கண்டேன். பச்சை மாமலைபோலுள்ள மேனியின் வலது மார்பில், செந்நிற மேனியுடையவளாய் விளங்குகிறாள் திருமகள். இக்காட்சி காலையில் தோன்றும் கதிரவன் பசுமை நிறத்தோடு செந்நிறமுடையவனாய் விளங்குகின்றான். ஆதலால் அருக்கன் அணி நிறமுங்கண்டேன்' என்கிறார்.

'அடியார்களது பகையை அழிக்கக் கிளர்ந்து எழும் அழகிய திருச்சக்கரத்தைக் கண்டேன். போரின்கண் வெற்றி முழக்கம் செய்யும் சங்கைக் கண்டேன். கடல்போன்ற நிறமுடைய எம்பெருமானது திருவுருவம் இது' என்று சேவித்தார்.

இம்மூவரும் மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுது முக்தி பெற்றார்கள். இம்மூவரும் பாடியது முறையே முதல் திருவந்தாதி, இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந் திருவந்தாதி எனப்படும்.

卐

---

புலவர். கு. மதுரகவி இராமானுஜம்,

பழனி

---

# சுவர்க்கமா, நரகமா?

'மீனம்'

பகல் முழுதும் நல்ல வெய்யில்.

சோழ நாட்டின் பல்வேறு புனிதத் தலங்களைக் கால்நடையாகவே நடந்து தரிசித்து வந்து கொண்டிருந்தார் அந்தப் பெரியவர்.

அன்று மதிய உணவு உண்டபின், அவரால் தமது பயணத்தைத் தொடர முடியவில்லை; உடல் முழுவதிலும் நெருப்பை வாரிக் கொட்டியிருப்பது போன்று தாங்க முடியாத ஓர் எரிச்சல். ஆம், அவ்வளவு வெப்பம்!

ஆயினும், அடுத்தத் தலத்தை அன்றைய இரவிற்குள் எப்படியாவது அடைந்து விட வேண்டும் என்னும் அவரது தவிப்பு வெளிப்படையாகவே குடியிருப்பின் பிரதான வீதியின் நடுப்பகுதிக்கு வந்து விட்டிருந்தார். இரு மருங்கிலும் நிறைய வீடுகள் உள்ள நீண்ட தெரு அது. ஆயிற்று, தெருவின் மறுகோடிக்குச் சென்று விட்டால் போதும், அங்குள்ள குளத்தில் மாலைக் கடன்களை முடித்து விட்டுப் புறப்பட்டு விடலாம்.

அப்போதுதான் அந்த ஓலம் அவரது செவிகளில் விழுந்தது. கால்கள் தாமாகவே நின்றன. தெருவின் மறுமுனையிலிருந்த வீடு ஒன்றிலிருந்து தான் அது வர வேண்டும். எவரோ இறந்து விட்டிருக்க வேண்டும் என்பதையே அந்த அழுகைக் குரல் அறிவித்தது. பயணத்தை இனித் தொடர முடியாது. அது அவர் வழக்கம். இறந்தவரின் சடலம் அப்புறப்படுத்தப்பட்டாலன்றி, அதைத் தாண்டி களைத்து வந்திருப்பது போல் தெரிகிறது. மோர் தரச் சொல்லுகிறேன். சற்று நேரம் சென்றபின் என் மகன் கோயிலிலிருந்து பிரசாதம் கொண்டு வருவான். சாப்பிட்டுவிட்டுப்படுத்துக் கொள்ளலாம்' என்று சொன்னாள் அப்பெண்மணி.

'தங்களுக்கு எதற்கு, அம்மா, சிரமம்? படுத்துக் கொள்ள அநுமதி கொடுத்தால் போதும்.'

'ஐயா, எங்களுக்கு இதில் சிரமம் எதுவும் இல்லை. நாங்கள் ஏழைகளே ஆனாலும், வீட்டிற்கு வந்தவர்கள் பட்டினியோடு படுப்பதை விரும்ப மாட்டோம்' என்று சொல்லியவள் வீட்டின் உள் பக்கமாக நோக்கி,

'காமு! தண்ணீரும் கொஞ்சம் மோரும் கொண்டுவா அம்மா! வழிப்

தெரிந்தது. எப்போது வெய்யிலின் கடுமை குறையும், எப்போது புறப்படலாம் என்று சிந்தித்த வண்ணம் இருந்தார் அப்பெரியவர். எனவே, பிற்பகல் நான்கு மணி அளவில் வெம்மை சற்றே குறைந்ததும் அவர் தமது பயணத்தை மீண்டும் தொடர்ந்தார்.

குறுக்கு வழியாகவே அவர் நடந்து கொண்டிருந்தார். எனினும், அடுத்த தலத்திற்குச் சற்று முன்னதாகவே இருக்கும் குடியிருப்பின் ஒரு புறத்தை அடையும் போதே அந்தி படரத் தொடங்கிவிட்டது. நடையைச் சற்று எட்டியே போட்டார். அந்தக் குடியிருப்பின் வழியாகச் சென்று அதன் மறுபுறம் சென்று விட்டால், ஒரு கல் தொலைவுதான் செல்ல வேண்டியிருக்கும். முந்நிலாக் காலம் ஆதலால், விரைவாகவே நடந்து அடுத்த திருத்தலத்திற்கு இரவு எட்டு மணிக்குள் சென்றுவிடலாம் என்று எண்ணியவாறு, அவர் அவர் செல்வதில்லை. இன்றிரவு இந்தக் குடியிருப்பில்தான் தங்க வேண்டும் போலிருக்கிறது. மறுநாள் சவத்தை எடுத்த பிறகே அவர் தமது பயணத்தைத் தொடர வேண்டும்.

வலது புறமிருந்த விசாலமான தொரு வீட்டின் திண்ணையில் உட்கார்ந்தார். உள்ளேயிருந்து வயதான மாது ஒருத்தி வெளியே வந்து, திண்ணையின் மீது உட்கார்ந்திருந்த பெரியவரிடம், 'ஐயா, எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று விசாரித்தாள்.

'அம்மா, நான் பல புண்ணியத் தலங்களுக்குக் கால்நடையாகவே சென்று கொண்டிருக்கிறேன். இன்றிரவு இங்கேயே தங்க வேண்டியதாகிவிட்டது. உங்கள் வீட்டுத் திண்ணையில் படுத்துக்கொள்கிறேன். பெரிய மனதுடன் நீங்கள் அநுமதிக்க வேண்டும்' என்றார் பெரியவர்.

'அதற்கு என்ன, ஐயா. அப்படியே செய்யுங்கள். நீங்கள் நிரம்பவும் போக்கர் ஒருவர் வந்திருக்கிறார். அத்துடன், கையோடு கோலமாவுப் பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டுவா. அந்திப் பொழுதாகிவிட்டது. வாசலைப் பெருக்கிக் கோலம் போட்டுவிடலாம்' என்று சொன்னாள்.

பிறகு, பெரியவரைப் பார்த்து,

'ஐயா, தவறாக நினைக்காதீர்கள். களைப்பினால் பயணத்தை நிறுத்திவிட்டீர்களா? அல்லது, வேறு ஏதாவது காரணமா! ஏனெனில், அடுத்த தலம் இங்கிருந்து இன்னும் அரை மணி நேர நடைகூட இருக்காதே' என்று அந்த அம்மாள் வினவினாள்.

'இல்லையம்மா. நானும் அடுத்த தலத்திற்குச் சென்றுவிட வேண்டும் என்றே போய்க் கொண்டிருந்தேன். ஆனால், இங்கு வரும்போது தெருக் கோடியிலிருந்து அழுகைக் குரல் கேட்டது, யாராவது இறந்து போனால் அழுவார்களே அம்மாதிரி. என் வழக்கம், பகலோ இரவோ நான்

செல்லும் வழியில் யாராவது மரணம் அடைந்து விட்டால், உடலை அப்புறப்படுத்தும் வரை நான் மேலே செல்வதில்லை. அதனுல்தான் இங்கு தங்க நேர்ந்தது,' என்ருர் பெரியவர்.

'ஆமாம், ஐயா. கோடி வீட்டில் வயதான பெரியவர் ஒருவருக்கு ஒரு வாரமாகவே உடல்நிலை சரியில்லாதிருந்தது. சற்று வசதியான குடும்பம் தான். பிள்ளைகளும் தகப்பனுரிடம் நிரம்பவும் அன்பு பூண்டவர்கள். என்ன செய்வது, கிழவரின் காலம் முடிந்துவிட்டது போலிருக்கிறது, என்ன செய்யலாம்.' என்று கூறினுள் அப்பெண்மணி.

இதற்குள், உள்ளேயிருந்து பத்து வயதுப் பெண் ஒருத்திச் சொம்பில் தண்ணீரும் ஒரு குவளையில் மோரும் எடுத்துக் கொண்டு வந்து, பெரியவருக்கு எதிரில் வைத்தாள். பிறகு, முன் வாசலில் நீர் தெளித்துக் கோலம் போட்டுவிட்டு உள்ளே போவதற்குத் திரும்பினுள்.

அப்போது, அம்முதியவள்,

'அம்மா, காமு! கோடி வீட்டுக் கிழவர் இறந்து போய்விட்டார் போலிருக்கிறது. அங்கிருந்து அழுகைக் குரல் கேட்டது. நீ போய், அவர் சுவர்க்கத்திற்குப் போயிருக்கிருரா, நரகத்திற்குப் போயிருக்கிருரா என்பதைத் தெரிந்து கொண்டு வந்துவிடு,' என்று அச்சிறுமியிடம் கூறினுள்.

'அப்படியே பாட்டி. போய்விட்டு வெளியிலிருந்து கொண்டே தெரிந்து கொண்டு வந்துவிடுகிறேன்' என்று, அது ஏதோ நிரம்பவும் எளிதான செயல் என்பதைப் போல, அச்சிறுமி சொல்லிவிட்டு அவ்வீட்டை நோக்கிச் சென்ருள்.

திண்ணைமீதமர்ந்திருந்த பெரியவருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. 'சுவர்க்கத்திற்கு அல்லது நரகத்திற்குப் போயிருப்பதை இங்குள்ளவர்கள் எப்படிக் கண்டு கொள்வது? அதை இச்சிறுமியிடம் சொல்லக் கூடியவர் யார்?' என்றும் கேள்விகள் அவர் மனத்தில் எழுந்தன.

அப்பெண்மணியின் வேண்டுகோளைப் புறக்கணிக்க முடியாமல், பெரியவர் கை கால்களை அலம்பிக் கொண்டு, சிறுமி கொண்டு வந்து வைத்திருந்த மோரைக் குடித்துவிட்டுக் குவளையைக் கீழே வைத்தார்.

தாம் கண்ட தலங்களின் பெருமைகளையும் சிறப்புக்களையும் அப்பெரியவர் அப்பெண்மணியிடம் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அரைமணி நேரம் ஆகியிருக்கும்.

அச்சிறுமி திரும்பி வந்து,

'பாட்டி, அவர் சுவர்க்கத்திற்குத் தான் போயிருக்கார்' என்று இயல்பாகச் சொல்லிவிட்டு, கோலமாவுப் பாத்திரம், சொம்பு, மோர்க்குவளை எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு உள்ளே போய் விட்டாள்.

சிறுமி சொன்னதைக் கேட்டு வியப்பின் உச்சிக்கே சென்று விட்ட பெரியவருக்கு மயக்கம் போடாத குறைதான்! 'என்ன இது, பெரியம்மாள் சிறுமியிடம் கூறியது ஆச்சரியம் என்ருல், அந்தச் சிறுமி என்னவோ கிழவர் சுவர்க்கத்திற்குப் போவதை நேரில் பார்த்தது போல் சொல்லியது அதைவிட வியப்பாயிருக்கிறதே!' என்று எண்ணிய அப்பெரியவர்,

'அம்மா, நான் கேட்கிறேனே என்று தவருக நினைக்க வேண்டாம். நான் பல இடங்களுக்குச் சென்றிருக்கிறேன். பல்வேறு அறிஞர்கள், ஞானிகள் மற்றும் தெய்வீக மனிதர்கள் ஆகியோரின் அருஞ்செயல்களைக் கண்டிருக்கிறேன். ஆயினும், இதுபோன்றதொரு நிகழ்ச்சியை எனது நீண்ட வாழ்நாளில் பார்த்ததும் இல்லை, கேட்டதுமில்லை. நீங்கள் விசாரித்துக் கொண்டு வரச் சொன்ன விவரம் ஒரு புறம் வியப்பு என்ருல், அதைவிட வியப்பாயிருக்கிறது உங்கள் பேத்தி, ஒரு பத்து வயதுச் சிறுமி, கொண்டு வந்த செய்தி! நீங்கள் இருவரும் தெய்வாம்சம் பொருந்தியவர்களாகத் தான் இருக்க வேண்டும். உங்களை வணங்கிக் கேட்கிறேன். இறந்து போன கிழவர் சுவர்க்கத்திற்குத் தான் போனுர் என்பதை உங்கள் பேத்தி எப்படிக் கண்டு பிடித்தாள்?' என்று கேட்டார்.

அதற்கு அந்த அம்மாள் புன்சிரிப்புடன்,

'என்னிடமோ என் பேத்தியிடமோ அதிசயமான ஆற்றலோ, தெய்வாம்சமோ எதுவும் கிடையாது. ஒருவர் இறந்தவுடன், அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் 'ஐயோ பாவம், ஒரு நல்ல ஆள் நம்மிடையேயிருந்து போய்விட்டார். உயிருடன் இருந்த போது அவர் எத்தனை பேருக்கு உதவி செய்திருக்கிருர்' என்று சொன்னுல், அவர் நிச்சயமாக சொர்க்கத்திற்குத் தான் போயிருப்பார். அதற்கு மாருக, 'அப்படா, பீடை ஒன்று ஒழிந்தது. இருக்கும் வரை வீட்டில் இருப்போருக்கும் ஊர்க்காரர்களுக்கும் எத்தனை இடையூறுகள் செய்தான்? இனிமேல் அனைவருக்கும் சற்று நிம்மதியாயிருக்கும்' என்ருல், அந்த ஆள் கட்டாயம் நரகத்திற்குத் தான் போவார் என்று பொருள். இதைத் தான் என் பேத்திக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறேன். அவ்வளவு தான்' என்று புகன்று நிறுத்தினுள்.

இதற்குள் கோயிலிருந்து அந்த அம்மாளின் மகன் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்தார்.

'வாருங்கள், ஐயா, உணவருந்தலாம்' என்று சொல்லி எழுந்துஉள்ளே சென்ற அப்பெண்மணியின் பின்னுல் சென்ற அப்பெரியவரின் மனத்தில், 'வாழ்க்கைக் கலையின் நுட்பங்களை சாதாரண மக்கள் நடைமுறையில் எவ்வளவு எளிதான முறையில் தெரிந்து வைத்திருக்கிருர்கள். அநுபவ அறிவின் தெளிவு எதிர்பாராத இடங்களில் எப்படிப் பளிச்சிடுகிறது. இதைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இன்று எனக்குக் கிட்டியதை எண்ணிப் பார்க்கும்போது, புதிய அறிவைப் பெறுவதற்கு வயது வரம்மே கிடையாது' என்னும் எண்ணங்கள் மேலோங்கி நின்றன.

# கீதை காட்டும் நல்வழி

**மோக்ஷ ஸன்யாஸ யோகம்**

அத்தியாயம் — 18

பகுதி — 29

ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தைத் தான் கேட்டது தனக்குக் கிடைத்த பெரும்பேறு என்று ஸஞ்ஜயர் அடுத்த சுலோகத்தில் குறிப்பிடுகிறார்

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ருத்ய
ஸம்வாத மிமம் அத்புதம் |
கேசவார்ஜுன யோ: புண்யம்
ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ||
(18–76)

'அரசரே! கேசவனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையில் நிகழ்ந்த இந்த அற்புதமான சம்பாஷணையை நினைந்து நினைந்து நான் மீண்டும் மீண்டும் மகிழ்ச்சி அடைகிறேன்.'

---

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Ph.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

---

நல்லதோ கெட்டதோ இரண்டும் மனதில் ஆழப்பதிந்துவிட்டால் திரும்பத் திரும்ப அது மனதின் மேல்தளத்திற்கு வரும். ஸஞ்ஜயர் பெற்ற பேறு எவருக்கும் அதுவரை கிட்டாத ஒன்றாகும். அதற்கு முன் அத்தகையதொரு சம்பாஷணை நிகழ்ந்திராததால் இதை அற்புத சம்பாஷணை என்று குறிப்பிடுகிறார். அதை நினைக்கும் தோறும் அவரிடம் மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுவதாகக் குறிப்பிடுகிறார்.

தச்ச ஸம்ஸம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய
ரூபமத்யத்புதம் ஹரே: |
விஸ்மயோ மே மஹான் ராஜன்
ஹ்ருஷ்யாமி ச புன: புன: ||
(18–77)

'அரசே! ஹரியின் அந்த அதிசய வடிவத்தை எண்ணியெண்ணி எனக்குப் பெருவியப்பு உண்டாகிறது. மென்மேலும் களிப்படைகிறேன்'.

விச்வரூப தர்சனத்தை அர்ஜுனன் பகவானிடம் வேண்டிப் பெற்றான். ஸஞ்ஜயருக்கு அதே காட்சி அகஸ்மாத்தாய் அவர் எதிர்பாராமல் கிட்டியது. நம்மவரது வாழ்வில் பெறற்கரிய பேறுகள் சில. எதிர்பார்த்தோ அல்லது எதிர்பாராமலோ வந்து வாய்க்கின்றன. அவற்றால் நம்மிடம் ஏற்படுகின்ற மாற்றங்கள் அளப்பரியவை. பற்பல யோகிகள் பக்தர்கள் ஞானிகள் அனைவரும் எந்தக் காட்சியைக் காண வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கிறார்களோ அந்தப் பெரும் காட்சி, அரிய காட்சி, அற்புதக் காட்சி ஸஞ்ஜயருக்குக் கிட்டியது குறித்து அவர் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறார். பெறற்கரிய பேறு என்று இதுதான் சொல்லுவதற்கு ஏற்றது. மற்றப் பேறுகள் எல்லாம் இதற்கு எவ்விதத்திலும் ஈடாகாது. அதை நினைக்கும் தோறும் மனதில் வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன என்று ஸஞ்ஜயர் தெரிவிக்கிறார்.

நாம் ஒவ்வொருவர் வாழ்க்கையை ஆராய்ந்தால் அவரவர் மனத்தூய்மைக்கும் பரிபக்குவத்திற்கு ஏற்ப அரிய காட்சிகளும் அரிய அனுபவங்களும் கிட்டுகின்றன. ஆனால் நம்மில் பெரும்பாலோர் அவற்றை உள்ளபடி பொருள்படுத்துவதில்லை. அவற்றின் மகிமையை உணர்வதில்லை. அதன் காரணம் நம்மிடம் நிலவும் அறியாமை, அகங்காரம் மற்றும் ஆணவமேயாம்.

அர்ஜுனனுக்கும் ஸஞ்ஜயருக்கும் கிட்டியது போன்ற விசுவரூபக் காட்சிகள் நமக்குக் கிட்டவில்லை என்றாலும் நாம் யாரை குருவாகக் கொண்டிருக்கிறோமோ அவரது அருளால் நமது வாழ்வில் அற்புதங்கள் நிகழாமல் இல்லை. அவ்வப்பொழுது சிறிய பெரிய அற்புத அனுபவங்கள் நமக்குக் கிட்டினாலும் நாம் உடனுக்குடன் மறந்து விடுகிறோம். அவற்றை மறக்காமல் திரும்பத் திரும்ப நினைவு கூர்ந்தால் நமக்கு இனம் புரியாத ஒரு மகிழ்ச்சி ஏற்படும். அது நம்மை ஆன்மீகத்தில் மேல்நிலையில் இருக்க உதவி செய்யும்.

அடுத்த சுலோகம் கீதையின் கடைசி சுலோகமாக அமைகிறது.

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ
யத்ர பார்த்தோ தனுர்தர: |
தத்ர ஸ்ரீர்விஜயோ பூதிர்
த்ருவா நீதிர் மதிர் மம || (17-78)

'யோகேசுவரனாகிய ஸ்ரீ கிருஷ்ணரும், வில் ஏந்திய பார்த்தனும் எங்கு உளரோ அங்கு செல்வமும், வெற்றியும், செழிப்பும், நிலைத்த நீதியும் உண்டு என்பது என் கொள்கை.'

இது கீதையின் முக்கிய சுலோகங்களில் ஒன்றாகும். ஸஞ்ஜயர் கூற்றாக அமைந்தாலும் வாழ்க்கையின் அடிப்படை உண்மையை எடுத்துப் புகட்டுகிறது. வாழ்வில் வெற்றிக்கான ரகசியத்தை இது தெரிவிக்கிறது. மகாபாரதப் போரில் பகவான் பாண்டவர்கள் பக்கம் இருந்தார். அவரது ஆயுதங்களையெல்லாம் துரியோதனன்

## உறவு

மன்னித்தல் என் தாய்
மன நிறைவு என் தந்தை
உண்மை என் மாமன்
அன்பு என் தம்பி
பிரியம் என் மைத்துனன்
சாந்தம் என் நெருங்கிய தோழி
அறிவு என் ஆசான்.
இவை அனைத்தையும் நான் நேசிக்கிறேன்.

—குரு நானக்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்.

வேண்டிப் பெற்றான். ஆயுத பலத்தை நம்பிய கௌரவர்கள் அழிந்தார்கள். பகவானின் அருளில் நம்பிக்கை வைத்த பாண்டவர்கள் வெற்றி அடைந்தார்கள். வெறும் மிருக பலம் வெற்றியைத் தராது என்பது நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடமாகும். ராணுவ பலத்தில் நம்பிக்கை கொண்டு கோடிக் கணக்கில் ராணுவ பலத்தைப் பெருக்கி வரும் நாடுகளுக்கு இது ஒரு முக்கிய பாடமாகும்.

இதைவிட முக்கியமான ஒரு கருத்தை நாம் கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். பாண்டவர்கள் பக்கம் பகவான் தாமே இருந்தாலும்கூட அவர்கள் தங்கள் வெற்றிக்காக தங்களது முயற்சி முழுவதையும் வெளிக்காட்ட வேண்டியிருந்தது. பகவான் உடன் இருக்கிறாரே என்பதற்காக சும்மா கையைக் கட்டிக் கொண்டு இருந்தால் வெற்றி கிட்டாது என்பதைக் காட்டுவதுதான் இதன் நோக்கம்.

ஸ்ரீ கிருஷ்ணர் யோகேசுவரன் எனப்படுகிறார். தர்மம், அர்த்தம், காமம்‘ மோக்ஷம் அனைத்துக்கும் அவரே மூலகாரணம். பார்த்தன் வில்லேந்தியவனாக இங்கே குறிப்பிடப்படுகிறான். பார்த்தனின் கையில் உள்ளவில் மனித முயற்சியின் எடுத்துக்காட்டாயமைகிறது. வில்லேந்திய விஜயன் முயற்சியே வடிவெடுத்த மனிதனின் பிரதிநிதியாவான். இறைவனது அருள் இருந்தாலும் மனித முயற்சியும் தேவை என்பதைத்தான் இந்த சுலோகம் சுட்டிக் காட்டுகிறது. ‘எல்லாம் பகவான் செயல்’ என்று சொல்லி, முயற்சியில் ஈடுபடாத மனிதனுக்கு வெற்றி வாய்க்காது என்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டும். தெய்வத்தின் அருளும் மனிதனுடைய நேர்மையான முயற்சியும் எங்கே ஒன்று சேர்ந்து காணப்படுகின்றனவோ அங்கே செல்வம், செழிப்பு, வெற்றி, நீதி எல்லாம் மிளிரும் என்பதைக் திருதராஷ்டிரனுக்கு ஸஞ்ஜயன் தெளிவாக எடுத்துப் புகட்டுகிறார். ‘அரசே!’ இறையருள் உம் பக்கம் இல்லை. உங்கள் புதல்வர்கள் அநியாயமான வழியில் செல்வதால் அவர்களது அழிவு நிச்சயம்’ என்பதைத் தெளிவாகக் கூறியும் அரசனின் செவிகளில் அது ஏறவில்லை. காரணம், அவனது புதல்வர்கள்மீது அவன் கொண்டுள்ள பாசமும் அவனிடமிருந்து அவிவேகம் மற்றும் அறியாமை அவனது அறிவை மறைத்தன.

இறையருள் சூரிய ஒளிக்கு நிகர். அனைத்துப் பொருள்கள் மீதும் சூரிய ஒளி சமமாக விழுந்தாலும் கண்ணாடியில் அது நன்றாகப் பிரதிபலிக்கிறது. கல்லில் பிரகாசிப்பதில்லை. அதுபோல மனத்தூய்மையும், பக்தியும் உடையவர்களிடம் அவர்களது நேரிய முயற்சிகளில் இறையருள் அற்புத விளைவுகளை ஏற்படுத்துகிறது. அவை அற்றவரிடம் இறையருள் காணப்படுவதில்லை. மாறாக அவர்கள் இருப்பதையும் இழந்து அல்லற்படுகின்றனர்.

எனவே நாம் நமது கடமையை ஒழுங்காகச் செய்வோம். செய்யும் தொழிலே தெய்வம். பற்றற்றுப் பணி செய்வோம். இறையருள் நமக்குத் துணை நின்று நமக்கு வெற்றி செல்வம், மன அமைதி, இறுதியில் பிறப்பிறப்பற்ற பெருநிலை அனைத்தையும். நல்கும் இதில் ஐயமில்லை. கண்ணனருளால் எங்கும் அமைதியும் ஆனந்தமும் நிலவட்டும்.

கீதையின் சாரத்தை விளக்கும் ஒரு பாடலுடன் நாம் இத்தொடர் கட்டுரையை நிறைவு செய்வோம்.

கண்ணன் சொன்னதென்ன கீதை
யிலே - அதைக்
கருத்தில் கொள்வாய் உந்தன் வாழ்க்
கையிலே
அண்ணன் தம்பி சுற்றம் என்ப
தெல்லாம் - வெறும்
அறிவில் குழப்பம் தரும் வார்த்தை
களே (கண்ணன்...)
எவன் எதைச் செய்தாலும் அவன்
அறிவான் - அந்த
எண்ணத்தின் தரம கொண்டு பலன்
தருவான் (கண்ணன்...)
அவன் பெயரைச் சொல்லிக்
கடமையைச் செய் - அதன்
விளைவுகளை அவனுக்கர்ப்பணம்
செய் (கணணன்...)

கீதை காட்டும் நல்வழியில் நாமும் சென்று நலமனைத்தையும் பெறுவோமாக.

முற்றும்.




# ஆர்த்ரா விரதம்

விரதம் என்பதைப் பொதுவாக எப்படி எல்லாம் கடைப்பிடிக்கவேண்டும் என்று விரதகல்பம், விரத சூடாமணி முதலிய நூல்கள் கூறுகின்றன. தான் செய்ய வேண்டிய விஷயத்தில் உறுதியாக மனதில் தீர்மானம் செய்வதற்கே வ்ரதம் என்று பெயர் என்பதை "கர்தவ்ய விஷயே நியத, ஸங்கல்ப; வ்ரதம்" என்று கூறுகிறது. மேலும் விரத தினத்தில் அடிக்கடி தண்ணீர் குடித்தல், தூக்கம், மைதுனம், தாம்பூல தாரணம், அசைவ உணவு ஆகியவை கூடாது என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இதனை

"அஸக்ருத் ஜல பானம் ச திவா
ஸ்வாபம் ச மைதுனம்
தாம்பூல சர்வணம் மாம்ஸம் வர்ஜ
யேத் வ்ரத வாஸரே"

என்ற வரிகள் விளக்குகின்றன. பொதுவாக ஆகாரம் புசிக்காமல் இருப்பது மட்டுமே உபவாசம் என்று வழக்கில் உள்ளது. ஆனால் இதைக் கடைப்பிடிப்பதோடு மந்த்ரஜபம், பூஜை, ஸத்கதா ச்ரவணம் ஆகிய செயல்களே மிகவும் முக்யமானது என்று கூறப்பட்டுள்ளது. விரத தினத்தில் ப்ரம்மசர்யம், அஹிம்சை, ஸத்யம், சைவ உணவு ஆகியவைகள் மிகவும் அவசியம் என்பதை தேவல ஸ்ம்ருதியில்,

"ப்ரம்மசர்ய மஹிம்ஸாச ஸத்யம்
ஆமிஷ வர்ஜனம்"

என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அக்னிபுராணத்தில் தரையில் படுத்து உறங்குவதையும், 3,5,12,24, முதலிய எண்ணிக்கைகளில் தானம், தக்ஷிணை, ப்ராம்மண போஜனம் (வேத வித்துக்களுக்கு) செய்யும்படியும் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

திரு. பி. ரவீந்திரன்-திப்பிராஜபுரம்.

விரதங்கள் செய்யத் தகாத காலங்கள் எது என்பதை லல்ல ஸ்ம்ருதி விளக்குகிறது. மேலும் பெண்கள் விரதம் இருப்பதனால் கணவன், தந்தை, மகன் இவர்களில் யாராவது ஒருவரின் அனுமதி பெற்றே கடைப்பிடிக்க வேண்டும் என்பதை,

"யா நாரீ கல்வநாஜ்ஞாதா பர்த்தா
பித்ரா ஸுதேனவா
நிஷ்பலம் து பவேத் தஸ்யா யத்
கரோதி வ்ரதாதிகம்"

என்ற ச்லோகம் உணர்த்துகிறது. பல தீபிகையில் காளிதாசர் "ஸ்ரீபதே ஸத் வ்ரதானி ச" என்று குறிப்பிடுகிறார். அதாவது திருமால் நல்ல வ்ரதங்களை கடைப்பிடிப்பதால் மகிழ்ச்சி அடைகிறார் என்பதாகும்.

இவ்விதம் ஸகல தேவதைகட்கும் தனித்தனியே அனேக விரதங்கள் கூறப்படுகின்றன. அதில் சூல விரதம், உமாமஹேஸ்வர விரதம், சிவராத்ரி விரதம், ஆர்த்ரா வ்ரதம் முதலியவைகள் யாவும் ஸ்ரீ பரமேசுவரனைத்

த்ருப்திப் படுத்துவதாகும். மேற் கண்ட ஆர்த்ரா விரதத்தைப்பற்றி ஸ்காந்த புராணம் உபதேச காண்டம் அத்தியாயம் இருபத்தெட்டில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. திருவாதிரை விரதத்தை முஞ்சகேசர் என்ற முனிவர் கடைப்பிடித்து ஆடவல்லானின் தரிசனத்தையும் முக்தியையும் பெற்றார். பதஞ்சலி முனிவரும் கார்க்கோடகனும் இவ் விரதத்தால் இறைவனது நாட்டியத்தைக் கண்டு களித்து பிறகு முக்தி பெற்றனர். வ்யாக்ரபாதருக்கு சிவதாண்டவ தரிசனம்கிடைத்ததுடன் உபமன்யுவையும் மகனாகப் பெற்றார். இறைவன் விபுலர் என்ற அந்தணரை சரீரத்துடன் விமானம் ஏற்றி கைலாச தரிசனம் செய்வித்தார். பிறகு விபுலர் மீண்டும் வீடு திரும்பி பலகாலம் வாழ்ந்து சிவலோகம் அடைந்து ஸாமீப்யமும், பின் சாயுஜ்யமும் பெற்றார்.

ஸ்காந்த புராணத்தில் இவ்விரதத்தை அனுஷ்டிப்பவரது கைகளில் போகம், மோக்ஷம் இரண்டும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள்ளது என்பதை,

''சரந்தியே மஹாத்மனோவ்ரதமேதத் சிவப்ரியம்
தேஷாம் புக்திச்ச முக்திச்ச கரஸ்தா நாத்ர ஸம்சய: ''

என்று கூறுகிறது. இவ்விரதத்தைப் பற்றி மேலும் ஸ்காந்தத்தில்,

''ஆர்த்ரா வ்ரதஞ்ச வக்ஷ்யேஹம் ஸர்வ கல்யாண காரணம்
ஆதித்தே சாபகேருக்ஷம் ரௌத்ரம் யத் ப்ரதிதம் புவி ''

''தத்தினே ப்ராதருத்தாய சுசிர் பூத்வா ஸமாஹித:
த்யாத்வா நடேசம் ஹ்ருதயே ஸமஸ்தாபத் ப்ரணாசகம் ''

என்று விளக்குகிறது.

அதாவது இந்த ஆர்த்ரா விரதம் எல்லா மங்களத்துக்கும் காரணமானது என்றும், ஸகலவித ஆபத்துக்களையும் நீக்கும் என்றும், ப்ரதி வருடம் சூரியன் தனுர் ராசியில் உள்ளபோது, ருத்ரனை அதிதேவதையாக உடைய திருவாதிரை நட்சத்திரம் கூடிய, உலகில் பிரஸித்தமான இந்த நாளில் காலையில் நீராடி நடராஜ மூர்த்தியை ஒருமித்த மனதுடன் த்யானித்து வணங்க வேண்டும் என்று கூறுகிறது. தவிர முதல் நாள் உபவாசம் இருந்து சிவாலயத்தில் நெய் தீபம் ஏற்றி நடராஜ மூர்த்தியின் அபிஷேகத்தைக் கண்டு தரிசிக்க வேண்டும். தன்னால் இயன்ற திரவியங்களையும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு மறு நாள் திருவாதிரை தினத்தன்று அருணோதயத்தில் எழுந்து நீராடி சிவபூஜை செய்து பல வகை நிவேதனங்களைப் படைத்து, சிவனடியார்க்கு உணவு அளித்துத் தானும் உண்ண வேண்டும். பெண்கள் அரிசியும் வெல்லமும் சேர்த்து செய்யப்பட்ட ஆதிரைக் களியை தயாரித்து இறைவனுக்குப் படைத்து நோன்பு இருக்க வேண்டும். பெண்கள் நெற்கதிரையும் சிவபிரானுக்குப் படைப்பதுண்டு. சிவதாண்டவ ஸ்துதிகளை இன்று படிப்பது சாலச் சிறந்ததாகும். இந்த நல்ல நாளில் சிவபெருமான் மிகவும் ஆனந்த மூர்த்தியாக இருப்பதாக கந்தபுராணம் கூறுகிறது. இதனை ஸ்காந்தம்,

''அஸ்மின் ருத்ர திதௌ சம்பு: பரமானந்த நிர்ப்பர:
ஸர்வேஷாமபி ரக்ஷார்த்தம் கரோத் யானந்த தாண்டவம்
தஸ்மாத் வ்ரதமிதம் புண்யம் வ்ரதானாமுத்தமம் த்விஜா: ''

என்று கூறுகிறது. இந்த திருவாதிரை திருநாளில் சிவபிரான் ஆனந்த பரவசராகி இவ்வுலகத்து உயிர்களை ரக்ஷிக்க ஆனந்தக் கூத்தாடுகிறார் என்பது இதன் பொருளாகும்.

நடராஜமூர்த்திக்கு விசேஷமான தலங்களான தில்லைச் சிதம்பரம், திருவெண்காடு, மதுரை, திருவாலங்காடு, திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருக்குரங்காடுதுறை எனப்படும் லால்குடி, திருவாசி, குழிபிறை, திப்பிராஜபுரம் முதலிய இடங்களில் ஆருத்ரா தரிசனத்தைக் கண்டு களிக்க கண்கள் ஆயிரம் இருந்தாலும் போதாது. திருக்குடந்தையிலும் இந்நாளில் ஒரே இடத்தில் பல தலங்களின் நடராஜமூர்த்திகளை ஒன்றாகக் காணலாம். வேதத்தில் நான்காம் காண்டம், ப்ரச்னம் நான்கு, அனுவாகம் பத்திலும் திருவாதிரையின் சிறப்பு கூறப்பட்டிருக்கிறது. புஷ்பதந்தர் என்ற காஷ்மீரக் கவியும் இத்திருநாளைப்பற்றி விளக்கியுள்ளார். இந்த நட்சத்திரம் வானவீதியில் ஒரு அம்புபோலக் காட்சி அளிக்கிறது. தேவாரமும் இந்த நாளைப் புகழ்கிறது. நடராஜமூர்த்தியின் ஆகாச தத்துவத்தைப்பற்றி சாந்தோக்யம், ப்ருகதாரண்யம், கைவல்யம் முதலிய உபநிஷதங்கள் வர்ணிக்கின்றன. இவரது அருகில் உள்ள சிவகாமசுந்தரி வாக்தேவதா சக்தியான மனோன்மனி என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

மற்ற தலங்கட்கு இல்லாத தனிப் பெருமை தில்லைக்கு உண்டு. சிதம்பரத்தின் கிழக்கு வாசல் வழியாக மணிவாசகரும், தெற்கு கோபுரம் வழியே திருஞானசம்பந்தரும், மேற்கு வாயில் வழியே நாவுக்கரசரும், வடக்கு வாயில் வழியே சுந்தரமூர்த்தி நாயனாரும் வந்து வழிபட்டதாக வரலாறு உள்ளது. நடராஜ தத்துவத்தில் உடுக்கை படைத்தலையும், அபயக் கரம் காத்தலையும், தீ அழித்தலையும், தூக்கிய திருவடி அருளலையும், முயலகன் மீது வைத்த பாதம் மறைத்தலையும் உணர்த்துவதாக ''சிதம்பர மாஹாத்மியம்'' என்ற நூல் கூறுகிறது. அமரகோசமும் இவரை ''மஹாகாலோ மஹா நட:'' என்றே புகழ்கிறது. லலிதா ஸஹஸ்ரமும் அன்னையை ''மஹேசுவர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ'' என்று போற்றி, அன்னையே இறைவனின் ருத்ர தாண்டவத்துக்கு ஒரே ஸாக்ஷி என்று குறிப்பிடுகின்றன.

## பயனில்லாமை

புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று வாராத கால்கள், இறைவனைக் குனிந்து வணங்காத தலை, பிறர் கெஞ்சிக் கேட்கக்கொடுத்து உதவாத கைகள், நல்லவர்களின் அறிவுரைகளைக் கேட்காத காதுகள் ஆகியன இருந்தும் பயனில்லை.

—விவேக சிந்தாமணி

## சிறந்தது

கங்கை நீர் சிறந்தது.

அதனினும் சிறந்தது அபிஷேக நீர்;

அதனினும் உயர்ந்தது கும்பாபிஷேக நீர்;

அதனினும் உயர்ந்தது ஏழைகளுக்காக உழைக்கும் ஒரு உத்தமனுடைய முகத்தில் துளிர்க்கும் வியர்வை நீர்.

அனுப்பியவர்: வி. ஸ்ரீதர்-கோயம்புத்தூர். —வாரியார்.

இத்தகைய நடராஜப் பெருமாள் எழுந்தருளி உள்ள தில்லையம்பதி விராட் புருஷனின் இதய மத்தியில் உள்ளதாக "ஜாபால தரிசனம்" என்ற உபநிஷதம் கூறுகிறது. மேலும் இதனைப்பற்றி உமாபதி சிவாசாரியாரின் குஞ்சிதாங்கிரிஸ்தவம், மகுடாகமம், திருமூலரின் திருமந்திரம் முதலியனஅரியவிளக்கம் தருகின்றன. ஸ்காந்த புராணம் சங்கர ஸம்ஹிதை சிவரஹஸ்ய காண்டமும், தக்ஷ காண்டமும் சிவதாண்டவத்தைச் சிறப்பித்துக் கூறுகின்றன. இறைவனின் உடுக்கையில் இருந்து ஏற்பட்ட பதினான்கு வகை ஒலிகளில் இருந்தே பாணினி முனிவர் அஷ்டாத்யாயீ என்ற வியாகரண நூலை இயற்றியதாகக் கூறப்படுகிறது. தவிர திருவாரூரை மூலாதாரத்தலம் என்றும், திருவானைக் காவலை ஸ்வாதிஷ்டானத்துக்கு உரியது எனவும், திருவண்ணாமலை மணிபூரகம் என்றும், சிதம்பரத்தை அனுஹத க்ஷேத்ரமாகவும், காளஹஸ்தியை விசுத்திக்கு உரியதாகவும், முக்தியைத் தரும் காசியை ஆக்ஞா க்ஷேத்ரமாகவும் பெரியோர்கள் வகுத்து வைத்துள்ளனர்.

தவிர "ஆதிசிதம்பரம்" என்று அழைக்கப்படுவதும், ராமாயண காவியத்திலேயே புகழப்பட்டதுமான திருவெண்காடு என்ற தலத்திலும் நடராஜப் பெருமானுக்கு ஒப்பற்ற திருமுன் தனியே உள்ளது. இவரது பதினான்கு உலகங்களும் தனது பாத அசைவினால் அசையும் என்பதைக் காட்ட பதினான்கு சதங்கைகள் உடைய காப்பு ஒன்றைப் பாதத்தில் அணிந்துள்ளார். ப்ரணவம் முதலாக நம; முடிய உள்ள 81 பத மந்த்ரங்களைக் குறிக்கும் வண்ணம் எண்பத்தி ஒன்று சங்கிலி வளையங்கள் அமைந்த அரைஞாணை இறைவன் இத்தலத்தில் அணிந்துள்ளார். இருபத்தெட்டு சதுர்யுகங்கள் முடிந்துவிட்டது என்பதைக் காட்டும் வகையில் 28 எண்ணிக்கை உடைய எலும்பு மணிகளைக் குறிக்கும் ஆபரணம் ஒன்றினையும் இவர் அணிந்துள்ளார். "என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பிலங்க" என்ற கோளறு பதிகத்தை நினைவூட்டும் வகையில் இங்கு ஒரு புறம் ஆமை ஓடும், ஒரு புறம் பன்றிக் கொம்பும் அமைந்த பதக்கம் ஒன்றும் இறைவனது திருமார்பினை அலங்கரிக்கின்றன. தலையில் ஷோடச கலைகளைக் குறிக்கும் பதினாறு சடைகள் உள்ளன. மற்றும் கங்கை, பிறைச் சந்திரன், மயிற்பீலி முதலியனவும் இவரை அழகுறச் செய்கின்றன.

ஒவ்வொரு க்ஷேத்ரத்தில் ஒவ்வொரு புண்ய தினத்தை ஒட்டி குறிப்பாக ப்ரும்மோத்ஸவம் செய்வார்கள். தில்லையில் ஆருத்ரா தரிசனம் ப்ரும்மோத்ஸவமாக நடத்தப்படுகிறது. தமிழகத்தில் உள்ள பெரும்பான்மையான சிவத்தலங்களில் முதல் நாள் இரவு முழுவதும் நடராஜப் பெருமானுக்கு அபிஷேகம் செய்து இறைவனை திருவாதிரையன்று திருவீதி உலா எழுந்தருளச் செய்வார்கள். இப்பெருமானை நாரதரும் வழிபட்டதாக வரலாறு உள்ளது. ஆதிசங்கரரும் நவரஸத்திற்கும் ஆதிகாரணமாக நடராஜமூர்த்தியைக் குறிப்பிடுகிறார். ஒவ்வொரு நாளும் மாலை வேளையான ப்ரதோஷ காலத்தை சிவ தாண்டவ நேரம் என்று அழைப்பதுண்டு. இந்நேரத்தில் ஆடவல்லானைத் தரிசிப்பது சாலச் சிறந்தது. முயலகன் என்ற அரக்கன் மீது ஒரு பாதம் வைத்து ஆடும் சிவபிரான் திருவாசி என்ற தலத்தில் மட்டும் பாம்பின் மீது தனது பாதத்தை வைத்து ஆடுகிறார். தவிர முடித்த சடையுடன் காணப்படுகிறார். சம்பந்தப் பெருமானுக்கு இத்தலத்திலேதான் இறைவன் பொற்கிழி அளித்தார். காரைக்கால் அம்மையாருக்கு விருப்பமான திருவாலங்காடு என்ற தலத்தில்தான் தனது நாட்டியத்தின் போது கீழே விழுந்த குழையை நர்த்தனம் ஆடிக்கொண்டே மீண்டும் எடுத்து அணிந்ததாகவும் இதனை எங்கேயோ இருந்த திருவள்ளுவர் ஞான த்ருஷ்டியால் கண்டு களித்ததாகவும் தல வரலாறு கூறுகிறது.

இத்தகைய அரும்பெரும் சிறப்புகளை உடைய நடராஜமூர்த்தியின் ப்ரும்மோத்ஸவத்தையும், ஆருத்ரா தரிசனத்தன்று நடக்கும் ரதோத்ஸவத்தையும் தில்லையில் கண்டு களித்தும் நம்மால் இயன்ற அளவு ஆர்த்ரா விரதத்தை அனுஷ்டித்தும் ஆடவல்லானின் திருவருளுக்குப் பாத்திரமாவோமாகுக.

"சுவர்ண பத்மினி தடாந்த திவ்ய<br>ஹர்ம்ய வாஸினே<br>ஸுபர்ண வாஹன ப்ரியாய சூர்ய<br>கோடி தேஜஸே<br>அபர்ணயா விஹாரிணே பணுத<br>ரேந்த்ர தாரிணே<br>ஸதா நமசிவாய தே ஸதா சிவாய<br>சம்பவே"

—ஹாலாஸ்ய தாண்டவ ஸ்துதி.<br>—பதஞ்ஜலி.



(12-ம் பக்கத் தொடர்ச்சி)

அவனிடம் சென்று நீரேற்று உன் பூமியை வாங்கிக் கொண்டாய். குணத்தில் சிறந்த உன்னுடைய இச்செயலைக் கேட்பார் அனைவரும் இதைக் கொண்டாடவேண்டியிருக்க, உன்னைச் 'சிறிய வடிவைக் காட்டிப் பெற்று பெரிய வடிவாலே அளந்து கொண்ட வஞ்சகன்', 'தனக்கு தானம் கொடுத்தவனிடம் உள்ளதையெல்லாம் அபஹரித்தான்', 'தான் விரும்பியதைக் கொடுத்தவனைப் படுகுழியாகிய பாதாளத்தில் தள்ளியவன்' என்றெல்லாம் இவ்வுலகில் பிறந்த பாவிகள் ஏசுகிறார்களே!

சுக்ராச்சார்யார் வந்திருப்பவன் விஷ்ணு, தேவதைகளுக்குக் கார்யம் செய்வதற்காக வந்திருக்கிறான் என்று மாவலிக்கு எச்சரித்தார். அப்படித் தெரிந்திருந்தும் இந்த உன்னுடைய மண்ணை உனக்கெதிரிலேயே தன்னதாக அபிமானித்து உனக்கே நீர் வார்த்துக் கொடுக்க வல்ல துணிவு அவனுக்கு இருந்தது. அப்படிப் பட்டவனை 'பகவானின் சொத்தை அபஹரித்தவன்', 'அஹங்காரம் நிறைந்தவன்', 'அஸுரத் தன்மை வாய்ந்தவன்' என்று தூற்ற வேண்டியிருக்க அப்படி ஒருவரும் அவனைப் பழிப்பாரில்லையே! பழியாததோடன்றியும் கொடையாளி என்று அவனைப் புகழவுமன்றோ செய்கிறார்கள்!

மாவலியை வாமனன் படுகுழியில் தள்ளினானென்பதும் உண்மையல்ல. அவனுக்கு தண்டனையளிப்பதற்கு பதிலாக நன்மைகளையே செய்தான். அவனை ஸுதலத்தின் அரசனாக்கிப் பிறகு ஸ்வர்க்கமும் மோக்ஷமும் தந்தருளினான். மேலும் தனது விசால மனப்பான்மையால் ஸுதலத்தில் அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் காப்பதற்காகத் தாமே அங்கே கோட்டை வாயிலில் காவலனாகவும் இருந்தார். இவையெல்லாவற்றையும் மறந்து குணத்தைக் குற்றமாகவும் குற்றத்தைக் குணமாகவும் தலைகீழாகக் கொள்பவர்களே இந்த ஸம்ஸாரத்தில் நிறைந்துள்ளனர் என்று ஆழ்வார் உலக இயற்கையை வெறுக்கிறார்.

பகவான் கீதையில் பதினைந்தாம் அத்யாயத்தில் தன்னைப் புருஷோத்தமனாகக் கூறியிருப்பது ப்ரஸித்தம். அங்கு 16 முதல் 18 வரையுள்ள ச்லோகங்களில் கண்ணன் அருளியதாவது: வேதம் முதலிய ப்ரமாணங்களில் க்ஷரன் அக்ஷரன் என்று இரு வகையினரான ஜீவர்கள் கூறப்பெறுகிறார்கள் என்பது ப்ரஸித்தம். இவர்களில் ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள நான்முகன் முதல் பசும்புல் வரையிலுள்ள ஜீவர்கள் பத்தர் (ஸம்ஸாரத்தில் கட்டுண்டவர்) அல்லது க்ஷரர் எனப்படுகின்றனர். ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்ட, மாறுபடக்கூடிய ப்ரக்ருதியின் ஸம்பந்தம் விலகிய, முக்தர்களுக்கு அக்ஷரர் என்று பெயர். உத்தமனான புருஷன் கீழே கூறிய இரண்டு வகை ஜீவர்களைக் காட்டிலும் வேறுபட்டவன். பரமாத்மா என்று வேதங்கள் அவனைப் பேசுகின்றன. ப்ரமாணங்களைக் கொண்டு அறியப்படும் அசேதநம், அசேதந ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள பத்தன், ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற முக்தன் என்ற மூன்றிலும் ஆத்மாவாய் ப்ரவேசித்து அவற்றைத் தாங்குகிறபடியாலும், எவ்வித விகாரமும் இல்லாதவனாகையாலும், அவற்றை நியமிப்பவனாகையாலும் உத்தம புருஷன் அவற்றைக் காட்டிலும் வேறானவன் என்பது தெளிவு. கீழ்க்கூறிய காரணங்களால் க்ஷரர், அக்ஷரர் என்ற இரு வகையினரைக் காட்டிலும் நான் மிகவும் உயர்ந்தவனாக இருக்கிறபடியால் வேதத்திலும், வேதார்த்தங்களை அறிவதற்குக் காரணங்களான ஸ்ம்ருதி, இதிஹாஸ புராணங்களிலும் புருஷோத்தமன் என்று ப்ரஸித்தனாக நான் விளங்குகிறேன்.

புருஷர்களுள் உத்தமன் தான் கொடுத்த வாக்கை நிறைவேற்றாமலிருப்பதில்லை. சக்ரவர்த்தித் திருமகன் ஸீதையிடம் கூறிய பின்வரும் ச்லோகத்தை இங்கு நினைபோம்.

**अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।
न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥**

'நான் உயிரையும், லக்ஷ்மணனோடு கூட உன்னையும் விடுவேனே ஒழிய, செய்த ப்ரதிஜ்ஞையை விடமாட்டேன். அதிலும் விசேஷமாக ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்த ப்ரதிஜ்ஞையை விடேன்'. இராஜ்யத்தைத் திரும்பி வாங்கிக் கொடுப்பதாக இந்திரனுக்கும், புத்ரனாகப் பிறப்பதாக அதிதிக்கும், தாம் செய்த இரண்டு ப்ரதிஜ்ஞைகளையும் பூர்த்தி செய்ததாலும் வாமனன் உத்தமனாகிறான்.

தனக்குக் கஷ்டம் நேர்ந்தாலும் பிறருக்கு உதவி செய்ய ஸந்தர்பம் கிடைத்தால் அதுவே தனக்குப் பேறாக நினைப்பவன் உத்தமன். 'உவந்த உள்ளத்தனாய் உலகமளந்து' என்று இதை திருப்பாணாழ்வார் காட்டியருளினார். இப்படிப்பட்ட ஸௌலப்யத்தையுடைய உத்தமனைத் தனக்குச்சிறந்த ஆப்தன் என்று நினைக்காமல் அவனுடைய பரத்வம் அல்லது மேன்மையையே நினைத்து அகல்பவன் தெரிந்தே நல்ல ஸந்தர்பத்தை நழுவ விடுகிறான். அவனே நராதமன், மனிதர்களுள் கடையன் என்கிறது கீதை. ஏனெனில் பகவான் அடையத் தகுந்த உத்தமன் என்பதை ஒருவன் அறியாததால் அணுகவில்லை என்றால் அது அவனது குற்றமல்ல. அறிந்தும் ஒருவன் விலகினான் என்றால் அவன் தெரிந்தும் கெட்டவனாகிறான். ஆகவே புருஷோத்தமனை யடைந்து யாவரும் நற்கதி பெறுவார்களாகுக.





# துரோணர் ஒரு துருவ நட்சத்திரம்

பாரத நாடு பெருமை பல படைத்தது. தெய்வத் திருமலைகளாகிய இமயமும் வேங்கடமும் இந்த நாட்டில்தான் இருக்கின்றன. கங்கை எனும் கடவுள் நதியும், தெய்வப் பொன்னி எனலாய காவிரி ஆறும்


**புலவர். பெ. கிருஷ்ணராஜன்,**
M.A., B.Ed.,
சேலம்-6.


இங்கேதான் பாய்கின்றன. முந்நதிகள் (கங்கை, யமுனை, சரஸ்வதி) சங்கமிக்கும் புண்ணியப் பிரயாகையும், முக்கடல்கள் தொட்டு வணங்கும் புனித கன்னியாகுமரியும் இந்த நாட்டில்தான் இருக்கின்றன. சிபிச் சக்கரவர்த்தி, குமண மன்னன் போலத் தங்கள் உடலையே வெட்டிக் கொடுக்க முன்வந்த வள்ளல்கள் வாழ்ந்ததும் இந்த மண்ணிலேதான். கோடையில் அனலிடை நின்றும் குளிர் காலத்தில் புனலிடை புகுந்தும் தவம் மேற்கொண்ட எண்ணற்ற முனிவர்கள் இருந்ததும் இப்புண்ணியப் பாரத நாட்டில்தான். உலகம் அனைத்தையும் வாழ வைக்கும் வேதங்களும் உபநிடதங்களும் உபதேசிக்கப்பட்டதும் இங்கேதான். பாரத நாட்டின் இந்த பெருமைகளையெல்லாம் சிந்தித்துப் பார்த்தார் ஒரு தமிழ்க் கவிஞர். அவர்தான் தேசியக் கவிஞர் பாரதியார். தமது சிந்தனையின் முடிவாக,

> பாரத நாடு பார்க்கெலாம் திலகம்
> நீரதன் புதல்வர் இந்நினைவு
> அகற்றுதீர்

என்று பாடி நம்மைத் தலை நிமிர வைக்கிறார் அவர். தன் பெருமைகளால் பாரத நாடு இவ்வுலகத்திற்கு அழகிய நெற்றித் திலகமாகத் திகழ்கிறது என்ற உண்மையையும் அவரது பாடலில் காண முடிகிறது.

நாம் தலை நிமிர்ந்து நடப்பதற்கு இவை மட்டும்தானா காரணங்கள்? இன்னும் பலப்பல இருக்கின்றன. இந்திய நாட்டின் வீரகாவியங்கள் என்று போற்றப்படும் இராமாயணம், மகாபாரதம் ஆகிய இரண்டு இதிகாசங்களுக்கும் அந்தப் பெருமையில் பங்குண்டு. இந்தக் காவியங்களில் நடமாடும் கதாபாத்திரங்கள், மக்கள் எப்படி வாழ வேண்டும் என்பதை எடுத்துக் காட்டி அவர்களை வழி நடத்திச் செல்லும் வழிகாட்டிகளாக விளங்குகின்றன. மகாபாரதக் கதையில் தருமன், துரியோதனன் என்னும் இருவரையும் முக்கியமான கதாபாத்திரங்கள் என்று சொல்லலாம். பொறுத்தவர் பூமி ஆள்வார் என்பதற்கு எடுத்துக் காட்டாய் இருந்தவன் தருமன். பொறாமைப்படுபவர்கள் அழிவார்கள் என்பதற்கு உதாரணமாய் இருந்து தன்னையும் தன்னோடு சேர்ந்தவர்களையும் அழிவிற்கு ஆளாக்கியவன் துரியோதனன். பாரதக் கதையைப் படிக்கும்போது பொறுமையால் ஏற்படும் நன்மையையும், பொறாமையால் உண்டாகும் அழிவையும் நாம் உணர முடிகிறது எனவே நல்வழியைத் தேர்ந்தெடுத்து அவ்வழியில் நாம் செல்வதற்கு இதிகாசங்கள் உதவுகின்றன.

வடமொழி வியாச பாரதம் தமிழ்ப் புலவர் பலரால் இனிய செய்யுள் நூல்களாகத் தனித்தனியே இயற்றப் பட்டுள்ளது. அவை அவ்வந் நூல்களை இயற்றிய ஆசிரியர் பெயரோடு சேர்த்தே வழங்கப்படுகின்றன. நல்லாப்பிள்ளை என்பவர் ஆக்கிய பாரதம் நல்லாப்பிள்ளை பாரதம் என அழைக்கப்படுகிறது. வில்லிபுத்தூர் ஆழ்வார் இயற்றிய பாரதம் வில்லி பாரதம் எனப் பெயர் பெற்றது. இக் கட்டுரைக்கு ஆதாரமான செய்யுட்களை வில்லிபாரதத்தில் காணலாம்.

பாரதக் கதையில் எண்ணற்ற துணை மாந்தர்கள் வருகிறார்கள். அவர்கள் வாழ்ந்த வாழ்க்கை நமக்குச் சிறந்த படிப்பினையாக விளங்குகிறது. அத்தகு மாந்தருள் வில்லாசிரியர் துரோணர் குறிப்பிடத் தக்கவர். கௌரவ பாண்டவர்களுக்கு நல்லாசிரியராக விளங்கிய இவர், ஈரேழ் உலகிலும் வில்வித்தையில் தாம் ஒருவரே சிறந்தவராக விளங்கினார். அதனால் இவரை **'வில் மகன் துரோணர்' என்று உலகம்**

பாராட்டியது. கல்வி பயிலுங்கால் உடன் பயின்ற பாஞ்சால நாட்டரசன் துருபதன் பின்நாளில் வாக்குத் தவறியமையும், கௌரவ பாண்டவர்களுக்குப் போர்ப் பயிற்சி அளிக்கும் ஆசிரியராகப் பீஷ்மரால் நியமிக்கப்பட்ட துரோணர் பிற்காலத்தில் அப் பீஷ்மர் காரணமாகத் துரியோதனனிடம் இருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டமையும் அவரது வாழ்க்கையின் திருப்பு முனைகளாக அமைந்தன.

பரத்துவாச முனிவருக்கும் கிருதாச்சிக்கும் பிறந்தவர் துரோணர். முன் காலத்தில் தானியங்களை அளப்பதற்குத் துரோணம் என்னும் பாத்திரம் (கலசம்) பயன்படுத்தப்பட்டது. இது, மரத்தால் செய்யப்பட்டது. இவர் அந்தத் துரோண கலசத்தில் பிறந்தவர். அதனால் இவருக்குத் துரோணர் என்னும் பெயர் ஏற்பட்டது. கலசத்தில் பிறந்தவர் என்னும் பொருளில் கலசோற்பவன் (ஆதி பருவம்-வாரணவதச் சருக்கம்-பா 93) என வில்லிபுத்தூராழ்வார் இவரைக் குறிப்பிடுகிறார். பெற்ற தந்தையாகிய பரத்துவாசர் தம் மகன் கற்றவர் சபையில் தலைமை பெற்று விளங்க வேண்டுமென்று விரும்பினர். தாமே ஆசிரியராக இருந்து ருக், யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும், சிட்சை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சோதிடம், சந்தஸ் என்னும் வேதாங்கம் ஆறினையும், மீமாம்சை, தர்க்கம், புராணம், சாஸ்திரம் என்னும் நான்கு உபாங்கங்களையும் துரோணருக்குத் தெளிவுறக் கற்பித்தார். வியாச முனிவரின் குமாரர் சுகன் ஆவார். இவர் தம் தந்தையைவிட மேம்பட்ட வைராக்கியத்தையும் ஞானத்தையும் பெற்றவர். இவரைச் 'சுகப் பிரம்மம்' என்று பாராட்டுவார்கள். அவரைப் போல துரோணர் சிறந்த அறிவு பெற்றமையால் சுகன்தன் ஞானம் பெற்ற துரோணர் (ஆதி பருவம்-வாரணவதச் சருக்கம்-பா 45) எனக் கற்றவர் உலகம் துரோணரை மதித்தது.

அறிவுக் கலைகளில் மேம்பட்ட துரோணர் போர்க் கலைகளிலும் சிறந்து விளங்க ஆசைப்பட்டார். ஜமதக்கினீ முனிவரின் மகனாகிய பரசுராமரைக் குருவாகக் கொண்டு. ஏழே நாட்களில் படைக்கருவிகளைப் பயன்படுத்துவதில் இவரே தலைவர் என்று பாராட்டுமாறு பயிற்சி பெற்றார். படைக்கலப் பயிற்சியில் துரோணருக்கு ஆர்வம் மேலும் அதிகரித்தது. அங்கிவேசன் என்னும் முனிவரிடம் மாணவராகச் சேர்ந்து போர்க்கலையில் மேலும் பல நுட்பங்களைத் தெளிந்தார். இவ்வாறு ஈரேழு உலகிலும் தமக்கு இணை எவருமில்லை எனப் பாராட்டுமாறு எல்லாக் கலைகளிலும் துரோணர் சிறந்து நின்றார்.

அங்கிவேசனிடம் துரோணர் போர்க்கலை பயின்றபோது பாஞ்சால நாட்டு இளவரசன் துருபதன் என்பவனும் உடன் பயின்றான். துரோணரும் துருபதனும் மனமொத்த நண்பர்கள் ஆனார்கள். இருவரும் இரவும் பகலும் ஒருவரை ஒருவர் பிரியாமல் இருந்தனர். பயிற்சி முடிந்து அவர்கள் பிரியும் காலம் வந்தது. அப்போது துருபதன் தன் உயிர் நண்பராகிய துரோணரிடம், 'என் தந்தைக்குப் பிறகு நான் ஆட்சியை ஏற்கும் காலத்தில் எனது நாட்டில் பாதியை உனக்கு அளித்து உன்னையும் அரசனாக்கி வைப்பேன்' என்று கூறிப் பிரிந்து சென்றான். அதன் பிறகு துரோணர் காட்டில் பர்ணசாலை அமைத்துப் பொருளாசையின்றித் தவநெறியில் வாழ்ந்து வந்தார். இல்லற தர்மத்தைக் கடைப் பிடிக்க எண்ணிய துரோணர், கிருபாச்சாரியரின் தங்கையாகிய கிருபி என்பவளை முறைப்படி திருமணம் செய்து கொண்டார். மங்கல முடைய மனைமாட்சி தொடங்கியது. அதன் பயனாக அசுவத்தாமன் என்னும் அன்பு மகன் பிறந்தான். அது சமயம் பாஞ்சால நாட்டில் தந்தை இறக்க, மகன் துருபதன் மணிமுடி தரித்து மன்னன் ஆனான்.

காட்டில் துரோணரின் குடும்பம் வறுமையில் வாழ்ந்து வந்தது. குழந்தை அசுவத்தாமனுக்கு ஊட்டுவதற்குப் பசுவின்பால் கிடைக்கவில்லை. குழந்தையின் நிலை கண்டு தாய் மனம் வருந்தினாள். அப்போது துரோணருக்குத் துருபதனைப் பற்றிய நினைவு வந்தது. தான் அரசனாய் இருக்கும் காலத்தில் பாதி நாட்டைத் தருவதாகச் சொன்ன துருபதன், குழந்தையின் பசியைப் போக்க ஒரு பசுவைக் கொடுத்தால்கூடப் போதும் என்று நினைத்து அவனிடம் சென்றார். துருபதனைச் சந்தித்துத் தம் மகவுக்குப் பாலூட்ட ஒரு பசுவை வழங்குமாறு துரோணர் வேண்டினார். ஆட்சி அகம்பாவம் துருபதன் கண்களை மறைத்தது. துரோணரை முன்பின் அறியாதவன் போல, 'நீ யார்?' என்று கேட்டான். 'நான் உனக்கு நண்பன்' என்று துரோணர் கூறியதும், துருபதன் ஏளனமாகச் சிரித்து அவரை அவமானப் படுத்தினான். 'மன்னன் நான். முனிவன் நீ. எனக்கும் உனக்கும் எப்படி நட்பு ஏற்பட முடியும்?' என்று அவரை இழிவு செய்தான். குணமென்னும் குன்றேறி நின்ற துரோணருக்குச் சினம் பொங்கியது.

புகன்றபடி நீஆளும் புவியும் பாதி
கொள்வேன்
இகன்ற சமரில் உன்னை இரதத்
துடனே கவர்வேன்

'சத்தியம் தவறியவனே! அங்கிவேசன் என்னும் முனிவரிடம் கல்வி கற்றுப் பிரியும் காலத்தில் நீ எனக்குத் தருவதாகச் சொன்ன உனது நாட்டில் பாதியைக் கைக் கொள்ளுவேன். அது மட்டுமல்ல. சொன்ன சொல் தவறி, என்னை இகழ்ந்து அவமானப் படுத்தியதற்காக உன்னைத் தேர்க்காலில் கட்டி இழுத்துச் செல்வேன்' என்று துருபதனிடம் சபதம் செய்துவிட்டுத் திரும்பினார். தமது சபதத்தை நிறைவேற்றத் தகுந்த காலத்தை எதிர் பார்த்திருந்தார் துரோணர்.

கௌரவர்களும் பாண்டவர்களும் பீஷ்மருக்குப் பேரக் குழந்தைகள் ஆவார்கள். அவர்களுக்கு வில்வித்தை கற்றுக் கொடுக்கக் கிருபாச்சாரியரைப் பீஷ்மர் நியமித்திருந்தார். ஒரு சமயம் விளையாடச் சென்ற இக் குருகுலக் குமரர்களின் பூப்பந்து ஒன்று கிணற்றில் விழுந்துவிட்டது. அதனை வெளியே எடுக்கத் தெரியாமல் குழந்தைகள் வருந்திக் கொண்டிருந்த போது துரோணர் அவ்வழியே வந்தார். குழந்தைகளின் வருத்தத்தை அறிந்தார். கிணற்றின் அருகில் முளைத்திருந்த வலிமை மிக்க ஒரு வகைப் புல்லைப் பறித்து எடுத்தார். அதனை அம்புபோலக் கூராக்கிக் கிணற்றில் இருந்த பந்தின்மீது எய்தார். அது பந்தைக் குத்தி நின்றது. அதன்பின் பல அம்புகளை, ஒவ்வொரு அம்பின் பின்பகுதியிலும் மற்றொரு அம்பு தைக்குமாறு எய்தி, கடைசி அம்பு தம் கைக்கு எட்டும் நிலையில் அதனைப் பிடித்து இழுத்துப் பந்தினை எடுத்துக் கொடுத்தார். குழந்தைகள் அவரைத் துரோணாசாரியார் என அறிந்து பீஷ்மரிடம் தெரிவித்தார்கள். பீஷ்மர் கிருபாச்சாரியரின் சம்மதத்துடன் துரோணரை அழைத்து வந்து தம் பேரக்குழந்தைகளுக்குப் போர்க்கலை அனைத்தையும் கற்பிக்கும் பொறுப்பை ஒப்படைத்தார். அப்போது, துருபதனிடம் தாம் செய்துவிட்டு வந்த சபதத்தைத் துரோணர் பீஷ்மரிடம் கூறினார். அதைக்கேட்ட பீஷ்மர் கௌரவ பாண்டவர்களுக்குப் போர்ப் பயிற்சி அளித்து அவர்களைக் கொண்டு அவரது சபதத்தை முடித்துக் கொள்ளுமாறு ஆலோசனை கூறினார். துரோணரும் அதற்கு இசைந்தார்.

அன்று முதல் தருமன் முதலான பாண்டவர் ஐவரும், துரியோதனன் முதலான கௌரவர் நூற்றுவரும் துரோணரிடம் படைப்பயிற்சிப் பெறத்தொடங்கினார்கள். அவர்களில் அருச்சுனன் வில்வித்தையில் மற்றவர்களைவிடச் சிறந்து விளங்கினான். அதனால் துரோணர் அவனிடம் பேரன்பு கொண்டு 'வில் கலையில் உன்னினும் மேம்பட்டவர் எவரும் இல்லையெனும்படி உன்னை ஆக்குவேன்' என்றுகூறிப் பயிற்சி அளித்து வந்தார்.

இரணியதனுஸ் என்பவன் வேடர் தலைவன். இவனுடைய மகன் ஏகலைவன். இவன் ஒரு சமயம் துரோணரை அடைந்து தனக்கு வில்வித்தை கற்றுத் தருமாறு வேண்டினான். 'இவன் கௌரவ பாண்டவர்களினும் சிறந்து விளங்குவான்' என உணர்ந்த துரோணர், 'நீயும் என் மாணாக்கனே. நீயாகவே பயின்சி பெறு. உனக்கு அனுமதி அளித்தேன்' என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டார். ஏகலைவன் தனது இருப்பிடம் சென்று துரோணரைப் போலவே ஓர் உருவம் செய்து, அதனையே குருவாகப் பாவித்துப் பயிற்சி செய்து வந்தான். விரைவில் அவன் வில்வித்தையில் அருச்சுனனைவிடச் சிறந்து நின்றான். குருகுலக் குமரர்கள் வேட்டைக்குச் சென்றிருந்த போது அவர்களுடைய நாய் ஒன்று குரைக்க முடியாதபடி ஏகலைவன் அதன் வாயில் ஏழு அம்புகளை எய்திருந்தான். அதனைக் கண்டு வியப்புற்ற அவர்கள், ஏகலைவனும் தம் குருவாகிய துரோணரின் சீடனே என அறிந்து வீடு திரும்பினர். அருச்சுனன் துரோணரைச் சந்தித்து, 'வில் கலையில் என்னினும் மேம்பட்டவர் இல்லையெனும்படி எனக்குக் கற்பிப்பதாகக் கூறினீர்களே. இப்பொழுது ஏகலைவனுக்கு நான் அறியாத பயிற்சிகளையெல்லாம் கற்பித்திருக்கிறீர்களே' என்று கேட்டான். துரோணர் ஏகலைவனது இருப்பிடம் அடைந்து அவன் பயிற்சி பெற்ற விதத்தை அறிந்தார். தம்மை அவன் குருவாகக் கொண்டதால் அவனது வலக்கைக் கட்டை விரலைக் குரு தட்சிணையாகப் பெற்றார். கட்டை விரலை இழந்ததால் ஏகலைவன் அம்பு எய்வதில் முன்போல் சிறப்புடன் திகழ முடியவில்லை. இதனால் துரோணர் அருச்சுனனுக்குக் கொடுத்த வாக்கினைக் காப்பாற்றியவர் ஆனார்.

குருகுலக் குமரர்களுக்குப் போர்க்கலை அனைத்தையும் கற்பித்து முடித்தார் துரோணர். அதன்பின் அவர்களிடம் 'பாஞ்சால நாட்டிலுள்ள துருபதன் என்ற அரசன் எமக்குப் பகைவன் ஆவான். உங்களில் யாராவது அவனைப் போரில் வென்று உயிருடன் தேர்ச் சக்கரத்தில் கட்டி இழுத்து வாருங்கள். இதுவே உங்களிடம் நான் விரும்பும் குருதட்சிணை' என்று துரோணர் கூறினார்.

உடனே கௌரவர்களும் பாண்டவர்களும் பாஞ்சாலனுடைய அரண்மனையை முற்றுகையிட்டார்கள். பாஞ்சாலனும் பெரும்படையுடன் அவர்களை எதிர்த்தான். கடுமையாகப் போர் நடந்தது. கடைசியில் அருச்சுனனுடைய அம்புகளாகிய வலையில் துருபதன் என்கிற சிங்கம் அகப்பட்டுக் கொண்டது. அருச்சுனன் அவனைத் தனது தேரில் கட்டி வேகமாகத் துரோணரை வந்து அடைந்தான். துரோணர் பாஞ்சால அரசன் துருபதனைப் பார்த்து, 'நீ பெரிய அரசன், நான் சாதாரண அந்தணன். என்னுடைய மாணவனிடம் நீ தோற்றுப் போனது உனக்குப் பெருமையோ?

அன்று எனக்கு நீஇசைந்த அவனி
பாதி அமையும் மற்று
இன்று உனக்கு நின்றபாதி யான்
வரைந்து தருகுவன்
உன்றனுக்கு வேண்டுமென்ன உயிரும்
வாழ்வும் உதவினேன்

'முன்பு நீ எனக்குத் தருவதாகச் சொன்ன பாதி இராஜ்ஜியமே எனக்குப் போதும். மீதி இருக்கும் பாதி அரசினை இன்று உனக்கு நான் பங்கிட்டுத் தருகிறேன். மேலும் உன் உயிரையும் வாழ்வையும் உனக்குக் கொடுத்தேன். பிழைத்துப் போ' என்று அவனை ஏளனம் செய்து விடுவித்து அனுப்பினார்.

இந்நிகழ்ச்சி துருபதனுக்குப் பெரிய அவமானமாக இருந்தது. தனக்குத் தீமை செய்த துரோணரையும் அருச்சுனனையும் பழிவாங்கவேண்டுமென்று முடிவு செய்தான். துரோணரைக் கொல்லுவதற்கு ஒரு மகனையும், அருச்சுனனுக்கு மனைவியாக ஒரு மகளையும் பெறக் கருதினன். யாசன், உபயாசன் என்ற இரண்டு பிரம்ம ரிஷிகளைக்கொண்டு புத்திர காமேஷ்டி யாகம் செய்தான். அப்போது கையில் வில்லுடனும் உடம்பில் வஜ்ஜிர கவசத்துடனும் தேர் ஒன்றின் மீது நின்றவாறு வேள்வித் தீயிலிருந்து ஒரு மகன் வெளிப்பட்டான். அதன்பின் அழகிய பெண் ஒருத்தியும் வெளி வந்தாள். மகனையும் மகளையும் பெற்ற துருபதன் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தான். மகனுக்குத் திட்டத்துய்மன் என்றும், மகளுக்குத் திரௌபதி-பாஞ்சாலி என்றும் பெயர்கள் இடப்பட்டன.

திட்டத்துய்மன் கல்வி கற்கும் வயதடைந்தான். போர்க் கலைகளைக் கற்க விரும்பிய அவன் துரோணரை அடைந்தான். அவரது பாதங்களில் விழுந்து வணங்கித் தனக்கு வில்கலையைக் கற்பித்துத் தருமாறு வேண்டினன். அவனல் தமக்கு மரணம் உண்டாகும் என்பதை அறிந்தும் துரோணுசாரியர் மறுக்காமல் அவனைத் தம் மாணவனுக ஏற்றுக் கொண்டார். வில்கலையின் நுட்பங்கள் அனைத்தையும் அவனுக்குக் கற்பித்தார்.

கௌரவர்கள் நூற்றுவரும் திருதராட்டிரனுடைய பிள்ளைகள். பாண்டவர்கள் ஐவரும் திருதராட்டிரனின் தம்பியாகிய பாண்டுவின் புத்திரர்கள். திருதராட்டிரன் பிறக்கும் பொழுதே கண் இல்லாதவனுகப் பிறந்தான். அதனல் அவர்களது குரு நாட்டிற்குத் திருதராட்டிரன் பெயரளவில் அரசனுக இருந்து, தம்பி பாண்டுவை இளவரசனுக அமர்த்தி ஆட்சி நடத்தி வந்தான். பாண்டு இறந்தபின் அவனுடைய மூத்தமகன் தருமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டினன். அது கண்டு துரியோதனன் முதலியோர் பொருமை கொண்டனர். பாண்டவர்களை அழிக்கப் பலவகைச் சதிகளைச் செய்தனர். இறுதியில் சூதாட்டத்தின் மூலம் பாண்டவர்களுக்குரிய செல்வம் அனைத்தையும் கவர்ந்தான் துரியோதனன். பின்னர், பன்னிரண்டு ஆண்டு காட்டிலும் ஓராண்டு நகரமொன்றில் மறைந்தும் வசித்து முடித்தபின் திரும்பி வந்தால், அவர்களது இராஜ்ஜியத்தைத் திருப்பித் தருவதாகத் துரியோதனன் வாக்களித்தான். அவ்வாறே பாண்டவர்கள் பதின்மூன்று ஆண்டுகளைக் கழித்துவிட்டுத் திரும்பி வந்தனர்.

அதன்பின் பாண்டவர் சார்பில் உலூகன் என்ற அந்தணன் துரியோதனனிடம் தூது அனுப்பப்பட்டான். சொன்ன சொல்படி பாண்டவர்களின் நாடு நகரங்களைத் திருப்பித் தந்து விடுமாறு அவன் துரியோதனனிடம் கூறினன். ஆனல் அவன் உலூகனின் பேச்சை அலட்சியப்படுத்தினன். பாண்டவர்களுக்கு எதையும் தரப் போவதில்லை என்றும், அவர்களைப் போரில் சந்திக்கத் தயார் என்றும் கூறினன். துரியோதனனது தீய உள்ளத்தை அறிந்த துரோணர்,

> திரத்து வாய்மைநீ தவறி மற்றவருடன்
> சேனையும் திறலும் கொண்டு
> உரத்து வாளமர் உடற்றலோ
> பெரும்பிழை; உடன்றனை ஆகில்
> சரத்து வாய்தொறும் சோரிகக்கிட
> விடும் தனஞ்செயன் தனு

சத்தியம் தவறிப் பாண்டவர்களோடு போர் செய்வது பெரிய குற்றமாகும். அங்ஙனம் போரிட்டால் தைக்கும் இடமெல்லாம் இரத்தம் பெருகும்படி அருச்சுனனது வில் அம்புகளைச் செலுத்திக் கொண்டே இருக்கும்-என்று துரியோதனனுக்கு அறிவுரை கூறினர். ஆனல் துரியோதனனே பாண்டவர்க்குப் பாகம் தர முடியாது என்று உலூகனிடம் உறுதியாகக் கூறி அனுப்பிவிட்டான். அதன் பிறகு கண்ண பெருமானே தூதாக வந்தும் துரியோதனன் மனம் மாற வில்லை. பாரதப் போர் தொடங்கி விட்டது.

பாண்டவர் படையில் கண்ணன், துருபதன், விராடன், திட்டத்துய்மன் முதலியோர் உதவிக்கு வந்தனர். பாண்டவர் காடு சென்றபோது திருதராட்டிரனுடன் தங்கிவிட்ட பீஷ்மர், கிருபர், துரோணர் முதலியோர் கௌரவர் அணியில் திரண்டு நின்றனர். கௌரவர் படைக்குப் பீஷ்மர் தலைமை தாங்கிப் போர் செய்தார். துரோணர் கௌரவர்களுக்கு உதவியாக இருக்கும் வரையிலும் அவர்களை வெல்ல முடியாது என்பதைக் கண்ணன் அறிந்தார். துரோணரை அடைந்து, 'நீ கருணை காட்டினல் தான் பாண்டவர்கள் வெற்றி பெற முடியும். இல்லாவிட்டால் மூவுலகங்களை அளந்த திருமாலும் உன்னை வெல்ல முடியாது.'

> நீஇவர்க்கு அளித்தியாகில் உண்டு
> அலால்நின்னை, வையம்
> தாயவர் தமக்கும் வேறல்அரிது

(முதற்போர்-பா. 13)

என்று கூறினர். அது கேட்ட துரோணர், 'போர்க் களத்தில் என் மகன் இறந்துவிட்டான் என்று நம்பத் தகுந்தவர் யாராவது சொல்லக் கேட்டால் புத்திரசோகத்தால் எனது வில்லைக் கைவிட்டு விடுவேன். நான் நிராயுதபாணியாக நிற்கும் அச்சமயத்தில் என்னைக் கொல்வதற்காகவே பிறந்திருக்கும் திட்டத்துய்மன் என்னேடு போர் செய்தால் உங்கள் எண்ணம் நிறைவேறிவிடும்' என்று கூறினர்.

பாரதப் போர் கடுமையாக நடந்தது. பத்தாம் நாள் போரில் கௌரவர்களின் படைத்தலைவர் பீஷ்மர் வீழ்ந்தார். அதன்பின் துரோணர் படைத்தலைவராக நியமிக்கப்பட்டார். பதினன்காம் நாள் போரில் துரோணர் விராடனையும் துருபதனையும் தலை துணித்து வெற்றிபெற்ருர்.

துருபதன் இறந்ததை அறிந்த திட்டத்துய்மன், 'என் கண் எதிரிலேயே என் தந்தையைக் கொன்ற துரோணரை, அவர் மகன் அசுவத்தாமன் காணுமாறு கொன்று ஒழிப்பேன்' என்று சபதம் செய்தான்.

பதினைந்தாம் நாள் துரோணர் தம் பேராற்றல் வெளிப்படப் போரிட்டார். அதனால் பாண்டவசேனை தோற்றது. அப்போது தேவ முனிவர் பலர் துரோணரை அடைந்து, 'அந்தணராகிய நீ அரசர்க்குரிய போரையும் வலிமையையும் செல்வ வாழ்க்கையையும் விரும்பலாமா? முனிவர்களுக்கு உரிய வேத சாஸ்திரங்கள் முதலியவற்றைக் கைக்கொள்ளுவதே முறை' என்று அறிவுரை கூறினார்கள். துரோணருக்கு ஞானம் பிறந்தது. போர் ஆசையை ஒழித்துப் பொறுமையை மேற்கொண்டார். துரோணரைக்கொல்லுவதற்கு இதுவே தக்க சமயம் என்று உணர்ந்த கண்ண பெருமான் திட்டத்துய்மனைக் கண்ணன் மேல் ஏவினார். அதே சமயம் தருமனை நோக்கி, 'இந்தப் போரில் மாளவ நாட்டரசன் இந்திரவர்மனுடைய அசுவத்தாமன் என்னும் யானையை வீமன் கொன்றுவிட்டான். இதை நீ அறிவாய். இச்செய்தியைத் துரோண புதல்வனாகிய அசுவத்தாமன் இறந்ததாகத் தோன்றும்படி நீ துரோணரிடத்தில் கூற வேண்டும்' என்று சொன்னார். பொய் கூறுவதற்குத் தனக்கு விருப்பமில்லை என்று தருமன் மறுத்துவிட்டான். 'நடவாததைக் கூறுவதுதானே பொய். நடந்ததைச் சிறிது மாற்றிச் சொல்வதில் தவறில்லை' என்று கண்ணன் சமாதானப்படுத்தினார். அதன்பின் தருமன் துரோணரை நெருங்கி அசுவத்தாமா ஆகிய யானையை வீமனாகிய சிங்கம் அழித்தது என்று கூறினான். இதனை செவிமடுத்த துரோணர் தம் மகன் அசுவத்தாமன் இறந்துவிட்டதாக நம்பி, வில் அம்புகளைக் களத்தில் எறிந்துவிட்டு, ஆசா பாசங்களை ஒழித்து அமைதியாக நின்றார்.

துரோணரின் எதிரில் நின்ற திட்டத்துய்மன், துரோணரின் கழுத்தை நோக்கி அம்பு செலுத்தினான். முன்பு பிரமனது தலையைச் சிவபெருமான கிள்ளியது போல, திட்டத் துய்மனின் அம்பு துரோணரின் தலையை அறுத்து வீழ்த்தியது. தந்தை இறந்தது கண்டு அசுவத்தாமன் புலம்பி அழுதான்.

வில்லாய் நீவெம் போர்முனை
வெல்லும் விறலாய்நீ
சொல்லாய் நீதொல் வேதியர் உட்கும்
தொழிலாய்நீ
வல்லார் வல்ல கலைகள் அனைத்தும்
வல்லானே
எல்லாம் இன்றே பொன்றின உன்
னோடு எந்தாயே!

'வில் கொண்டு போரிட்டால் விண்ணவரும் உங்களை வெல்ல முடியாது. வெறுங்கையோடு நின்றபோது குருத்துரோகி திட்டத்துய்மன் உங்களைக் கொன்றுவிட்டானே' என்று தந்தையின் பெருமைகளைச் சொல்லிச் சொல்லி அழுதான்.

ஒருவர் நல்லவரா கெட்டவரா என்பதை அறிவதற்கு அவருடைய செயல்களே ஆதாரமாகக் கொள்ளப் படும் என்றார் வள்ளுவப் பெருந்தகை.

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும்
தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

என்பது அவர் கூறிய குறட்பா. இந்த இலக்கணப்படி, கற்றவர் உலகம் துரோணாசாரியரை ஆராய்ந்து பார்க்கிறது.

உலகில வில்வித்தையில் அருச்சுனனைவிடச் சிறந்தவர் இல்லையெனும்படி ஆக்குவதாகத் துரோணர் வாக்குறுதி வழங்கியிருந்தார். ஆனால் தம்மை மானசீகமாகக் குரு எனக் கொண்டு வில்வித்தை பயின்ற ஏகலைவன், அக்கலையில் அருச்சுனனை விஞ்சி நின்றபோது தமது சத்தியம் தவறுவதை உணர்ந்தார். எனவே ஏகலைவனது திறமையைக் குறைக்கும் பொருட்டு அவனது கட்டை விரலைக் குருதட்சிணையாகப் பெற்று, அருச்சுனனுக்கு அளித்த சத்தியத்தைக் காப்பாற்றினார்.

தம்மைப் போலவே மற்றவர்களும் சொன்ன சொல் தவறாமல் நடக்க வேண்டும் என்று நினைத்தவர் துரோணர். அதனால்தான் பாதி இராஜ்ஜியத்தைத் தருவதாக வாக்குறுதி அளித்த துருபதன், தாம் சிறு உதவி கேட்டுச் சென்றபோது தம்மை ஏளனம் செய்ததால் அவனைத் தேர்க்காலில் கட்டிவரச் செய்து புத்தி கற்பித்தார். மற்றும், பாண்டவர்கள் பதின்மூன்று ஆண்டுகள் கழித்து வந்தால் அவர்களது நாடு நகரங்களைத் திருப்பித் தருவதாகச் சொல்லியிருந்தான் துரியோதனன். அவன் வாக்குத் தவறியபோது 'சொன்ன சொல் தவறுவது பெரும் பிழை. அதனால் உயிர்க்கு முடிவு உண்டாகும்' என்று துரியோதனனைக் கண்டித்து அறிவுரை கூறினார் துரோணர்.

துருபதனிடம் ஒரு பசுவைக் கூடப் பெற முடியாமல் வறுமையில் வாடிக் கொண்டிருந்த நேரத்தில் துரோணருக்கு ஆதரவு அளித்தவர் பீஷ்மர். அவர் துரோணரைக் கௌரவ பாண்டவர்களுக்கு ஆசிரியராக்கி அவரை வளமுடன் வாழச் செய்தார். தினைத்துணை நன்றி பெறினும் பனைத்துணையாகக் கொள்ளும் துரோணரால் பீஷ்மருடைய உதவியை மறக்க முடியவில்லை. எனவே தான், செய்ந்நன்றி மறவாத அச்சிந்தையாளர் தமக்கு உதவி செய்த பீஷ்மர் சார்ந்திருந்த கௌரவர்க்குத் துணையாக இருந்தார். போர்க் களத்திலும் உதவியாக இருந்து செஞ்சோற்றுச கடன் கழித்தார்.

பகைவனாயினும் தம்மைப் பணிந்தவனிடம் கருணை காட்டியவர் துரோணர். தம்மைக் கொல்லுவதற்காகவே

(17-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம்

**प्रायःस्वचरणौ पुंसां शरण्यत्वेन पाणिना ।**
**कृपयाऽऽदिशते श्रीमद्वेंकटेशाय मङ्गलम् ॥ ९ ॥**

**ப்ராயஸ்ஸ்வசரணௌ பும்ஸாம் சரண்யத்வேந பாணிநா |**
**க்ருபயா திசதே ஸ்ரீமத் வேங்கடேசாய மங்களம் ||**

**பதவுரை :**— *ப்ராய:=வெகுவாக; ஸ்வ சரணௌ=தன்னுடைய திருவடிகளை; பும்ஸாம்=ஜீவாத்மாக்களுக்கு; சரண்யத்வேந=(இவையே உங்களுக்குச்) சரணமென்று; பாணிநா=(தன் வலது) திருக்கையினால்; க்ருபயா = அன்புடன்; திசதே = கொடுக்(காண்பிக்)கின்றவனாகிய; ஸ்ரீமத் வேங்கட ஈசாய=ஸ்ரீ திருவேங்கடமுடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.*

**கருத்துரை :**—*திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையான் தன் வலது திருக்கையை முன்புறமாகக் கீழ் நோக்கி வைத்துக் கொண்டிருக்கிறார். இத்திருவடிகளே உங்களனைவர்க்கும் கதியென்று காண்பிப்பதுபோல் அது தோன்றுகின்றது. உண்மையை அன்புடன் உலகோர்க்குணர்த்தும் உத்தம புருடனாகிய திருவேங்கட முடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.*

**दयामृततरङ्गिण्यास्तरङ्गैरिव शीतलैः ।**
**अपाङ्गैः सिञ्चते विश्वं वेंकटेशाय मङ्गलम् ॥ १० ॥**

**தயாம்ருத தரங்கிண்யாஸ்தரங்கைரிவ சீதலை: |**
**அபாங்கை: ஸிஞ்சதே விச்வம் வேங்கடேசாய மங்களம் ||**

**பதவுரை :**—*தயா அம்ருத தரங்கிண்யா:=தயையெனும் அம்ருத நதியினுடைய; தரங்கை: இவ=அலைகள் போன்றவைகளான; சீதலை:=குளிர்ந்த; அபாங்கை:=கடைக் கண்களால்; விச்வம்=உலகத்தை; ஸிஞ்சதே=நனைக்(குளிரச்செய்)கின்றவனாகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.*

**கருத்துரை :** — *திருவேங்கடமுடையான் தண்ணிய தன் கடைக் கண்களால் உலகத்தைக் குளிரக் கடாக்ஷிக்கிறான். அலை நிறைந்த அம்ருத நதியில் முழுகி யெழுந்தது போல் உலகம் களிக்கின்றது. அத்தகைய திருவேங்கட முடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.*

**स्रग्भूषाम्बरहेतीनां सुषमावहमूर्तये ।**
**सर्वार्तिशमनायास्तु वेंकटेशाय मङ्गलम् ॥ ११ ॥**

**ஸ்ரக்பூஷாம்பரஹேதீநாம் ஸுஷமாவஹமூர்த்தயே |**
**ஸர்வார்த்தி சமநாயாஸ்து வேங்கடேசாய மங்களம் ||**

**பதவுரை :**— *ஸ்ரக் பூஷா அம்பர ஹேதீநாம்=மாலை அணி உடை ஆயுதம் இவைகளுக்கு; ஸுஷமா ஆவஹ மூர்த்தயே=அழகை உண்டு பண்ணுகிற திருமேனியை உடையவனும்; ஸர்வ ஆர்த்தி சமநாய=எல்லோருடைய துக்கங்களையும் தணிக்கின்றவனுமாகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.*

**கருத்துரை:**— *பூமாலை முதலியவைகளைச் சாத்திக் கொள்வதால் திருவேங்கடமுடையானுடைய திருமேனிக்கு என்றுமில்லாத புது அழகு ஏற்படுவதாக நினைப்பது தவறு. திருமேனி ஸம்பந்தம் பெற்று உய்ந்து போவது போல் அழகையும் மாலை முதலியவைகள் பெறுகின்றன. எல்லோருடைய கஷ்டங்களை தீர்க்கும் எம்பெருமான் தன் திருமேனியின் சோபையில் ஒரு சிறு பகுதியைக் கொடுத்து மாலை முதலியவைகளின் வருத்தத்தைத் தீர்ப்பதும் முறைதான். அத்தகைய திருவேங்கட முடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.*

**श्रीवैकुण्ठविरक्ताय स्वामिपुष्करिणीतटे ।**
**रमया रममाणाय वेंकटेशाय मङ्गलम् ॥ १२ ॥**

**ஸ்ரீ வைகுண்ட விரக்தாய ஸ்வாமிபுஷ்கரிணீதடே |**
**ரமயா ரமமாணாய வேங்கடேசாய மங்களம் ||**

**பதவுரை :**— *ஸ்ரீ வைகுண்ட விரக்தாய = பரம பதத்தில் (உள்ள தன்) பற்றை விட்டவனும்; ஸ்வாமி புஷ்கரிணிதடே = புஷ்கரிணியின் கரையில்; ரமயா=திருமகளோடு; ரமமாணாய=விளையாடிக்கொண்டிருப்பவனுமாகிய; வேங்கட ஈசாய=திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டாகட்டும்.*

**கருத்துரை :**—*பரம பதத்தில் பரவாஸுதேவன்* உருவத்தில் இருந்து கொண்டு பக்தரக்ஷணம் எனும்

தன் காரியத்தை நன்கு நிறைவேற்ற இயலாமல் எம் பெருமான் திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணீ தீரத்தில் திருவேங்கட முடையான் உருவத்தில் அர்ச்சையாய் எழுந்தருளி யிருக்கிறான். பக்தரக்ஷணம் எனும் காரி யத்தையும் நன்கு நிறைவேற்றுகிறான் எனின் பரம பதத்தினும் திருமலையின் சிறப்பு நன்கு விளங்குகின் றது. ஸ்ரீ மஹாலக்ஷ்மி திருமலையில் தனிக்கோயில் கொண்டிராமல் திருவேங்கடமுடையான் திருமார் பையே தன் கோயிலாக அமைத்துக் கொண்டாள். ஆகவே ஆழ்வாரும் 'அலர்மேல் மங்கையுறை மார் பன்' என்று அருளிச் செய்துள்ளார். அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

**श्रीमत्सुन्दरजामातृमुनिमानसवासिने ।**
**सर्वलोकनिवासाय श्रीनिवासाय मङ्गलम् ॥ १३ ॥**

**ஸ்ரீமத் ஸுந்தர ஜாமாத்ரு முநி மாநஸ வாஸிநே |**
**ஸர்வ லோக நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ||**

பதவுரை :—ஸ்ரீமத்ஸுந்தர ஜாமாத்ரு முநிமாநஸ வாஸிநே=ஸ்ரீ மணவாள மாமுனிக(ள் போன்ற பக்தர்க)ளின் திருவுள்ளத்தில் எப்பொழுதும் வஸிக் கும் இயல்புள்ளவனும்; ஸர்வ லோக நிவாஸாய= எல்லா உலகங்க(ளிலுள்ள சேதநா சேதந பதார்த் தங்க)ளிலும் எப்பொழுதும் (அந்தர்யாமியாய்) உறைந்திருப்பவனுமாகிய; ஸ்ரீநிவாஸாய=ஸ்ரீனிவா ஸனுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து=உண்டா கட்டும்.

கருத்துரை :—ஒவ்வொரு பொருளிலும் உள்ளும் புறமும் உறைந்து நிற்கும் உத்தமன் உத்தம பாக வதர்களின் திருவுள்ளத்தில் உவகையுடன் உறை கின்றான். அத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

**मङ्गलाशासनपरैर्मदाचार्यपुरोगमैः ।**
**सर्वैश्च पूर्वैराचार्यैस्सत्कृतायास्तु मङ्गलम् ॥ १४ ॥**

**மங்களாசாஸனபரைர் மதாசார்ய புரோகமை: |**
**ஸர்வைஸ்ச பூர்வைராசார்யைஸ் ஸத்க்ருதாயாஸ்து**
**மங்களம் ||**

பதவுரை :—மங்கள ஆசாஸந பரை:=(எம்பெரு மானுக்கு) மங்களங்களைக் கோருவதில் அதிக நோக்க முள்ளவர்களும்; மத் ஆசார்ய புரோகமை:=என் (இந் நூலாசிரியர்) ஆசார்யன் முதலியவர்களாலும்; ஸர்வை:=(மற்றுமுள்ள) எல்லா; பூர்வை: ஆசார்யை: ச=முன்னுள்ள ஆசார்யர்களாலும்; ஸத்க்ருதாய= உபசரிக்கப்(தொழப்)பட்டவரான ஸ்ரீ திருவேங்கட முடையானுக்கு; மங்களம்=மங்களமானது; அஸ்து= உண்டாகட்டும்.

கருத்துரை :—என் ஆசார்யர்கள் அவர்களுடைய ஆசார்யர்கள் முதலியவர்களாலும் பிற ஆசார்யர் களாலும் இத்திருவேங்கடமுடையான் ஸ்தோத் திரம் செய்யப்பட்டிருக்கிறான். நான் புகழ்வதே புதிதல்ல. இவ்வெம்பெருமானைத் தொழாதவர் களேயில்லை. அத்தகைய ஸ்ரீ திருவேங்கடமுடை யானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

**ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம் முற்றிற்று.**

---

(45-ம் பக்கத் தொடர்ச்சி)

பிறந்தவன் திட்டத்துய்மன் என் பதை அறிந்தும், அவன் தம் இரு பாதங்களிலும் வீழ்ந்து வில்கலை கற் பிக்க வேண்டும் எனக்கேட்ட போது மறுக்காமல் கற்பித்தவர் துரோணர்.

துரோணர் மிகச் சிறந்த வில்வீரர் மட்டுமல்ல. சொன்ன சொல் தவறாத சத்திய சீலர். நன்றி மறவாத நல்ல வர். பணிகின்ற பகைவனுக்கும் கருணை காட்டும் பண்பாளர். மனத் துக்கண் மாசு இல்லாதவர். கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களில் மிக்க வர் செந்தண்மை பூண்டு ஒழுகிய அந்தணர். வில்லிபுத்தூராழ்வார் இவரை மறுவில் அந்தணாளன் (வாரணாவதச்-பா. 81), கரணம் மறு வற்று இலங்கு திறலோன் (வாரணா வதச்-பா. 93), முழுதுணர் முனி (நிரைமீட்சிப்-பா. 85), ஜெகத்தினில் நிறைந்த கேள்விச் சிலைமுனி (பதினைந் தாம் போர்-பா. 13) என்றெல்லாம் பாராட்டி மகிழ்கிறார்.

பாரதக் கதையில் துரோணர் ஒரு துருவ நட்சத்திரம் போல விளங்கு கிறார். துருவனைவிடத் துரோணர் உயர்ந்தவர் என்னும் கருத்தில் துரு வனும் உவமை சாலாத் துரோணர் (பதினைந்தாம் போர்-பா. 12) என வில்லிபுத்தூராழ்வார் பாராட்டி யிருப்பது எண்ணி எண்ணி மகிழத் தக்கதாகும்.



(4-ம் பககத் தொடர்ச்சி)

மருத்துவமனை, திருப்பதி) பேராசிரியர். கே. என். வாஸ்வானி (துணைத் தலைவர், விவேகானந்தர் நினைவு மண்டபம், கன்னியாகுமரி) திருமதி. வி. சீதாலட்சுமி (ராயலசீமா லேஸா சமிதி, திருப்பதி) டாக்டர். எச். பாஸ்கர் நாயுடு (விரிவுரையார், எஸ். வி. கலைக்கல்லூரி திருப்பதி) திரு. என். ஏ. சந்திரமௌலி (துணைத் தலைவர் ஸ்ரீ ராமகிருஷ்ண சமிதி, திருப்பதி) ஆகியோர் இம்மாநாட்டின் போது முக்கிய பங்கேற்று உரையாற்றினர்.

**மற்றையச் செய்திகள் :**

இந்திய மத்திய உள்துறை அமைச்சர் திரு. பூடாசிங் மற்றும் மத்திய இரும்பு மற்றும் கனிப்பொருள் துறை அமைச்சர் திரு. எம். எல். ஃபொடேடர் ஆகியோர் 21-1-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர். தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு அவர்கள் திருமலையில் அமைச்சர்களை தேவஸ்தானத்தின் சார்பில் வரவேற்றார்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் கிழக்கு இரயில் நிலையத்தையும், தேவஸ்தானத்தாரின் 2-ஆவது மற்றும் 3ஆவது தர்ம சத்திரங்களை இணைக்கும் வகையில் ரூ. 4.5 இலட்சம் செலவில் கட்டப்பட்ட நடை மேம்பாலம் ஒன்றினை தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதிராஜு அவர்கள் 12-1-89 அன்று திறந்து வைத்தார்.

ஃ ஃ ஃ

புதுதில்லி லெப்டினன்ட்-கவர்னர் திரு. ரமேஷ் பண்டாரி தன் குடும்பத்தாருடனும் மற்றும் முன்னாள் இந்திய இராணுவத் தலைவர் மறைந்த ஜெனரல் வைத்யாவின் புதல்வியாரும் 1-1-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்தனர். திருமலையில் அவர்கள், தி. தி. தே. உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திரு. பி. வாசுதேவன் அவர்களால் வரவேற்கப்பட்டனர்.





திருமலையில் மத்திய அமைச்சர்கள்

## சந்தாதாரர்களுக்கு...

31-3-89—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே திருப்பதி. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

4 6 33 40 55 71 91 93 95 99 101 174 184 187 293 296 299 399 400 513 1215 1216 1331 1381 1390 1398 1404 2657 2661 2662 2674 2677 2681 2682 26[illegible]6 2691 2693 2694 2698 2665 2666 2674 2699 2701 2703 2705 2708 2709 2715 2718 2719 2721 2726 2727 2728 2735 2737 2738 2744 2749 2750 2756 2760 2761 2770 2772 2778 2779 2781 2782 2783 2787 2789 2793 2798 2799 2801 2802 2803 2810 2815 2817 2822 2826 2827 2828 2831 2833 2836 2838 3413 3923 முதல் 3927 3929 முதல் 3960 3962 3963 3966 முதல் 3970 3972 3973 3974 3976 3977 முதல் 3980 3982 முதல் 3987 3989 முதல் 3993 3996 முதல் 4000 4002 4003 4004 4006 4008 4009 4011 முதல் 4035 4037 4041 40[illegible]3 முதல் 4049 4051 4053 4054 4056 முதல் 4088 4090 4091.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED
AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

